# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...

KALKI • 03.10.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



ஜெ. நினைத்தால் மாற்றம்...




க்டோபர் மாத
ட்டுப் புடவைப்
ரிசுப் போட்டி
ரம்பம்...

ழங்குவோர்:



ாஞ்சிபுரம்
ாமாட்சி அம்மன்
ட்டு கூட்டுறவு சங்கம்

ஆட்ட நாயகி!



# சிறுநீர் கசிவா ?

# அடி இறக்கமா ?

இலவச தொலைபேசி ஆலோசனை : 0422 2323456

## GAURI - UROGYNECOLOGIST

பெண்களுக்கு ஏற்படும் சிறுநீர் கசிவு, அடிஇறக்கம் பிரச்சனைகளுக்கு தீர்வு !

இருமினாலோ, தும்மினாலோ சிறுநீர் கசிகிறதா ?

"சிலிங் சிகிச்சை"

அமெரிக்கா/இங்கிலாந்தில் பயிற்சி பெற்ற மருத்துவர்கள் ! சிறந்த மருத்துவ முறைகள் !

## GAURI UROLOGY

(Chennai only)

ஆண்களுக்கு ஏற்படும் பிராஸ்டேட் பிரச்சனைகள்

சிறுநீர்ப்பை, சிறுநீரகத்தில் ஏற்படும் கற்கள்

அவசரமாக அடக்கமுடியாமல் சிறுநீர் கழிக்கும் பிரச்சனைகள்

புற்றுநோய்




www.urogynecology.in

## GAURI

**Chennai**
No1. Crescent Park St
T.Nagar
Chennai -17
Ph:044-24341055
044-24322591

**Coimbatore**
Bala Medical Center
Ramanathapuram
Coimbatore - 45
Ph:0422-2323456
0422-2323333

**Bangalore**
(விரைவில்)
Motherhood
Hospital
IndraNagar

# கல்கி

03.10.2010

ஐ பக்கங்கள்
ஞாநி


40


20

"அம்மா தந்த வசனங்கள்!"
- தேசிய விருது பூரிப்பு


04

"ஜெ.நினைத்தால் மாற்றம் வரும்!"
- திருமா போடும் கணக்கு

காப்பீடு ஸ்பெஷல் பக்கங்கள்



## லால்குடி 80

# லால்குடிக்குத்

புள்ளி வைத்துக் கோலம் போடச் சொன்ன கர்நாடக சங்கீத உலகில் கோலம் போட்ட பின் புள்ளி வைத்தால் என்ன என்று யோசித்தவர் லால்குடி ஜெயராமன். போடப்பட்ட கோலங்களுக்குப் புள்ளிகள், வளைவுகள், சுழிகள் சேர்த்து இவர் செய்த அலங்காரம் இன்று லால்குடி பாணி என்று அங்கீகாரம் பெற்றிருக்கிறது. பக்கவாத்தியக் கலைஞராக வயலினுக்கு ஒரு தனி அந்தஸ்தைப் பெற்றுத் தந்தவர், தனியிசையில் ராஜாவாகத் திகழ்ந்தவர். வர்ணம், கீர்த்தனை, தில்லானாக்கள் இயற்றி வாக்கேயக்காரராகவும் பெயர் பெற்றவர். மகன் ஜி.ஜெ. ஆர்.கிருஷ்ணன், மகள் விஜயலக்ஷ்மி உள்பட ஏராள வயலின் சிஷ்யர்களை உருவாக்கியவர். வாய்ப்பாட்டில் கொடி கட்டிப் பறக்கும் பாம்பே ஜெயஸ்ரீ போன்ற பலரைப் பயிற்றுவித்து உயர்த்தியவர், ஹரிகதையில் அசத்திக்கொண்டிருக்கும் விசாகா ஹரியின் குரு...

இன்னும் எழுதி மாளாத ஏராளப் பணிகளைச் செய்துள்ள லால்குடி ஜெயராமனின் எண்பதாவது பிறந்த தின விழாவில் கோபாலகிருஷ்ண காந்தி ஆற்றிய தலைமையுரை தனித்து நின்றது.

"கை தட்டலுக்காகவும், ரசிகர்களுக்காகவும் இத்தனை நாள் இசைத்தீர்கள்... இனிமேல் உங்களுக்காக மட்டுமே வாசியுங்கள்..." எண்பதை நோக்கி அறுபது இப்படிப் பேச நிறைய நெஞ்சுரம் வேண்டும். அதோடு கலை மீதும் கலைஞர்கள் மீதும் கொண்ட உள்ளார்ந்த அக்கறையுடன் பேசினார் கோபாலகிருஷ்ண காந்தி. லால்குடி என்ற ஊருக்கு அடையாளம் கொடுத்த ஜெயராமன் தமது சொந்த கிராமத்துக்குத் (வேர்களுக்கு) திரும்ப வேண்டும். பக்கவாத்தியம் வாசித்தபோது உபகலைஞராகப் பெற்ற அனுபவங்களையும் பிரதான கலைஞராக மாறிய பின் அடைந்த முக்கியத்துவத்தையும் சமநோக்குடன் ஆராய வேண்டும். அந்த அனுபவங்களை நகைச்சுவை மிளிர சிஷ்யர்களுடன் பகிர்ந்து மகிழ வேண்டும் என்ற பொருள்பட

அமைந்த தலைமையுரை, மியூசிக் அகாடமியில் குழுமியிருந்த லால்குடி சிஷ்யர்களையும் ரசிகர்களையும் பரவசப்படுத்தியது. ஒரு கச்சேரிக்குக் கை தட்டும் ரசனையுடன் பேச்சின் இறுதியில் கைதட்டி மகிழ்ந்தார்கள். அவ்வப்போது படிமங்களுக்கு மாறி கவிதையாய்த் தவழ்ந்த கோபாலகிருஷ்ண காந்தியின் உரை தவிர, லால்குடியின் இயல்புகளை சப்த ஸ்வரங்களாக விவரித்த அசோக் லேலண்ட் சேஷசாயியின் பேச்சு, ஸ்ரீராம் குழுமத் தலைவர் ஆர்.தியாகராஜனின் ஆலோசனைகளை (லால்குடி பாணி கீர்த்தனைகள் ஆவணப்படுத்தப்பட வேண்டும்) உள்ளடக்கிய பாராட்டுரை என மேடை ஜொலித்தது செப்டம்பர் 19 அன்று.

லால்குடி இசைத் தொகுப்புகள் வெளியீடு, லால்குடி பாணி இசையைப் பயிற்றுவிக்கும் வகுப்புகளை முறைப்படுத்தவும் ஆசிரியர்களை உருவாக்கவும் தொடங்கப்பட்ட லால்குடி ஃபவுண்டேஷன் பற்றிய அறிவிப்பு, லால்குடி சிஷ்யர்களின் சேர்ந்திசை, அவர்களுள் நட்சத்திரங்களான சிலரின் தனி நிகழ்ச்சி என இரண்டு நாள் கல்யாணமாக (செப்டம்பர் 18,19) நடந்த விழாவில் விசாகா ஹரி வழங்கிய லால்குடி வாழ்க்கை சம்பவத் தொகுப்பு சூப்பர் ஹிட்! குரு தம்மிடம் பகிர்ந்துகொண்ட, தெரிவித்த வாழ்க்கை நிகழ்ச்சிகளை இசையுரையாக வழங்கினார்.

# திரும்புங்கள்!

''எத்தனையோ சரித்திரங்களைச் சொல்லியிருக்கிறேன். குருநாதர் முன்னிலையில் அவர் சரித்திரத்தைச் சொல்லக் கிடைத்தது பெரும் பாக்கியம்'' என்று நெகிழ்ச்சியுடன் சம்பவக் கோவையை நிறைவுசெய்தார்.

உலகெங்கிலுமிருந்து வந்திருந்த லால்குடி சிஷ்யர்களோ விழாவில் பங்கேற்றதை பாக்கியமாகக் கருதி மகிழ்ந்தனர்.

- மலர்





கல்கி

பாரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பாரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி
பொறுப்பாசிரியர்:
ஆர்.வெங்கடேஷ்
உதவி ஆசிரியர்கள்:
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா
வடிவமைப்பு:
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்
தொலைபேசி: 044 - 4343 8888
தொலைநகல்: 044 - 4343 8899
ஆசிரியர் குழு:
044 - 4343 8822
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
044 - 4343 8811
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
044 - 4343 8833
subscription@kalkiweekly.com
விற்பனை பிரிவு:
044 - 4343 8844
sales@kalkiweekly.com
இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்):
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

கடந்த ஆறு மாதங்களில் மூப்பது இலட்சம் உறுப்பினர்கள் விடுதலைச் சிறுத்தைகள் கட்சியில் சேர்ந்திருக்கிறார்களாம். 'அமைப்பாய்த் திரளுவோம்; அங்கீகாரம் பெறுவோம்; அதிகாரம் வெல்வோம்' என்ற மூன்று கோஷங்களை முன்னிறுத்திக் கட்சிப் பணியில் கடுமையாக இறங்கியிருக்கிறோம் என்கிறார் தொல்.திருமாவளவன். அனைத்துக்கட்சிக் குழுவுடன் காஷ்மீர் செல்லும் அவசரத்தில் இருந்தாலும், தமிழக அரசியல் குறித்து சற்றுக் காரசாரமாகவே பகிர்ந்து கொண்டார் திருமா...





''விடுதலைச் சிறுத்தைகள் 234 தொகுதிகளிலும் கணிசமான வாக்குவங்கியைப் பெற்றிருந்தாலும், தனித்துப் போட்டியிட்டு வெற்றி பெற முடியாத நிலைதான் உள்ளது. அதை மாற்றவே இந்தத் தீவிரக் கட்சிப் பணி. 2011 சட்டமன்றத் தேர்தல் எங்களுக்கு ஒரு முக்கியமான நிகழ்வு. நாங்கள் இணைந்திருக்கும் அணியில் இரண்டு இலக்கத்தில் சீட்டுகளைப் பெற்று, குறைந்தது ஏழு இடங்களிலாவது வென்றால்தான் எங்களால் தனிச் சின்னத்தைப் பெற முடியும். எனவே, அதை நோக்கியே எங்கள் அரசியல் யுக்திகள் இருக்கும்'' என்கிறார் வெளிப்படையாக.

### தமிழக அரசியல்?

''வரும் தேர்தல் தி.மு.க. - அ.தி.மு.க. அணியை மையப்படுத்தி இருந்தாலும் மூன்றாவது அணி கருத்தும் பரவியிருக்கிறது. ஆனால், எப்படிப்பட்ட கூட்டணி உருவாகும் என்று இப்போது சொல்ல முடியாது. தி.மு.க. கூட்டணியிலிருந்து காங்கிரஸைப் பிரித்து பலவீனப்படுத்தும் முயற்சிகள் தொடர்கின்றன. இந்தத் தேர்தலில் தோல்வி என்றால் அது அ.தி.மு.க. எதிர்காலத்தையே கேள்விக் குறியாக்கிவிடும். தி.மு.க.வோ, காங்கிரஸைத் தங்கள் கூட்டணியில் சேர்க்கும் முனைப்பில் இருக்கிறது. மூன்றாவது அணி அமைந்தாலும் அது தி.மு.க. அணிக்குத்தான் சாதகமாக இருக்கும். ஆட்சி அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ளும் வகையில் கூட்டணிக்குத் தயார் என்று ஜெயலலிதா சொன்னால், தமிழக அரசியலில் மாற்றம் நிகழும்; பரபரப்பு கூடும். தி.மு.க. - அ.தி.மு.க. ஆகிய இரு கட்சிகளும் மத்தியில் உள்ளது போன்றே கூட்டணி அரசுக்குப் பச்சைக் கொடி காட்ட வேண்டிய காலம் வந்துவிட்டது.''

### தி.மு.க. அணிக்கு வெற்றி வாய்ப்பு?

''சாதனைகள் மட்டுமே வெற்றியைக் கொண்டு வராது. கூட்டணி வலுவாக இருந்து செலவு செய்யும் சக்தியும் இருக்க வேண்டும். இந்த மூன்றில், கூட்டணி மிகவும் முக்கியம்.''

### மக்கள் மாற்றத்தை விரும்புகிறார்களா?

''மின்வெட்டு, விவசாயிகள் பிரச்னை, விலைவாசி, தலித் அதிகாரிகள் பழிவாங்கல், கருத்துச் சுதந்திரம் முடக்கம்... என்று பல பிரச்னைகளில் தி.மு.க. மீது மக்களுக்கு அதிருப்தி இருக்கிறது. ஏன் எங்

கள் கட்சிக்காரர்கள் பலரைக் குண்டர்கள் சட்டத்தில் உள்ளே வைத்திருக்கிறார்கள். ஆளும் கூட்டணியில் இருப்பதால் ஈழப் பிரச்னை உட்பட பல விவகாரங்களில் நெருக்கடியை நாங்கள் சந்தித்து வருகிறோம். குடும்ப அரசியல் - அதிகாரம் என்ற குற்றச்சாட்டு பல வருடங்களாகச் சொல்லப்படுவதுதான். ஆட்சியை மாற்றக் கூடிய அளவில் மக்கள் மனத்தில் மாற்றம் வந்திருக்கிறதா என்பதை இப்போது கணிக்க முடியாது.''

**அணி மாறுவீர்களா?**

''தி.மு.க. அணியில் நாங்கள் தொடரும்போது வேறொரு அணிக்குப் போவது என்ற பேச்சுக்கு இடமில்லை. இப்போது தி.மு.க. அணியில் காங்கிரஸ் தவிர நாங்கள் மட்டுமே இருக்கிறோம். எனவே, எங்களுக்குத் தேவையான சீட்டுகள் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. பா.ம.கவும் தி.மு.க. அணிக்கு வர வேண்டுமென்பதே என் விருப்பம்.''

**கழகங்கள் காங்கிரஸை அரவணைக்க விரும்புவது ஏன்?**

''என்றும் தொய்வில்லாத ஆறு சதவிகித வாக்கு வங்கியை வைத்திருக்கும் கட்சி காங்கிரஸ். தேசத்தை ஆளும் கட்சி வேறு. தேசிய அளவில் நல்ல மதிப்பீடும் அதிகார வலி மையும் அதன் வசம் இருக்கிறது. எனவே அதனுடன் கூட்டு அமைத்தால் ஆட்சியைப் பிடிப்பது எளிது என்பது கழகங்களின் பார்வை.''



# ''ஜெ. நினைத்தால் மாற்றம் வரும்!''

## - திருமா போடும் கணக்கு!

**காங்கிரஸ் மீது உங்கள் பார்வை?**

''காங்கிரஸ் என்று பார்க்காமல், இந்திய அரசு என்று பார்த்தோமென்றால் ஈழப் பிரச் னையில் அது செய்த துரோகத்தை மறக்கவும் மன்னிக்கவும்

முடியாது. காங்கிரஸ் மீது எங்கள் கட்சித் தொண்டர்கள் வெறுப்புடன் இருப்பதால் தேர்தலில் இணக்கமாகப் பணியாற்ற முடியுமா என்று சிலர் கேட்கிறார்கள். தேர்தல் என்று வந்துவிட்டால் வெற்றியை மட்டுமே லட்சியமாக வைத்துச் செயல்படுவோம். முரண்பாடான விவகாரங்களில், எங்கள் கருத்தைச் சொல்ல வேண்டிய இடத்தில் சொல்வோம்.''

**ஈழத் தமிழர்களிடையே உங்கள் செல்வாக்கு சரிகிறதா?**

''எங்கள் தேர்தல் நிலைப்பாட்டையும் கொள்கை தொடர்பான விஷயங்களையும் கலந்து பார்த்து விமர்சனம் செய்யாதீர்கள். 'யுத்தம் என்றால் மக்கள் இறந்துதான் போவார்கள்; பிரபாகரனைத் தூக்கில் போட வேண்டும்' என்று சொன்ன ஜெயலலிதாவோடு வைகோ, நெடுமாறன் ஆகியோர் நெருக்கமாக இருக்க முடியும் என்னும்போது, நாங்கள் தி.மு.க. - காங்கிரஸோடு தேர்தல் உறவு வைத்துக் கொள்ளக்கூடாதா? தேர்தல் ஜனநாயகத்தில் எங்களைத் தக்க வைத்துக்கொள்ள, பல கட்சிகளுடன் உடன்பாடு கண்டு கூட்டணி அமைத்துப் போட்டியிடுகிறோம். கொள்கையைப் பார்த்தால் தி.மு.க.வே காங்கிரஸோடு இருக்க முடியாது. தமிழக அரசியலை ஈழத் தமிழர்கள் புரிந்துகொண்டிருக்கிறார்கள். என் நிலைப்பாட்டையும் அவர்களால் தவிர்க்க முடியாது!''

**அ.தி.மு.க.வுக்குக் கூடும் கூட்டம்?**

''ஒரு கோடிக்கும் அதிகமாக அ.தி.மு.க.வில் உறுப்பினர்கள் உள்ளார்கள் என்று அவர்கள் கட்சிக்காரர்கள் சொல்கிறார்கள். எனவே ஓர் இடத்தில் கட்சித் தலைவி ஆர்ப்பாட்டம் நடத்தும்போது மாநிலம் முழுக்கவிருந்து ஒரு லட்சம், இரண்டு லட்சம் மக்களைத் திரட்டுவது என்பது எளிதாகிப் போகிறது. இதை அ.தி.மு.க.வுக்கு ஆதரவான அலை என்று ஊடகங்கள் செய்தி பரப்புகின்றன.''

**விஜயகாந்த்?**

''அவர் தனி அணி அமைத்து முதல்வராக வாய்ப்பே இல்லை. தமிழக அரசியலைப் பொறுத்தவரை தி.மு.க. - அ.தி.மு.க. இரண்டுக்கும் 25 சதவிகிதம் வாக்குவங்கி உண்டு. அதனுடன் கூட்டு சேரும் கட்சிகளின் வாக்குவங்கியும் சேரும்போது முப்பத்தி மூன்று சதத்துக்கு மேல் வோட்டுகள் பெற்று அந்தக் கட்சியின் தலைவர்கள் முதல்வராகிறார்கள். இப்படியிருக்க, எட்டு சதவிகிதம் வாக்கு வங்கி வைத்திருக்கும் விஜயகாந்த் முதல்வராவது எப்படி சாத்தியம்?''

**எட்டு சதவிகித வாக்கு வங்கியை வைத்திருக்கும் விஜயகாந்த்தால் முதல்வராக முடியாது.**

**ஜெ.வின் தலித் அரசியல்...?**

''முத்துக்கருப்பன், சிவகாமி போன்றவர்கள் பாதிக்கப்பட்டபோது குரல் கொடுக்காத ஜெயலலிதா, உமாசங்கர் விஷயத்தை அரசியலாக்குகிறார். உமாசங்கர் இடைநீக்கத்தை ரத்து செய்ய முதல் குரல் கொடுத்தவன் நான்தான். தவிர தொடர்ந்து அலட்சியப்படுத்தப்படும் தலித் அதிகாரிகளுக்கு முக்கிய போஸ்டிங் போடவும் வலியுறுத்தி வருகிறேன்.''

- ப்ரியன்

# இந்த நிலை யாருக்கு வேண்டுமானாலும் நிகழலாம்

ஒரு அன்பான கணவர், குழந்தைகள், ஒரு மகிழ்ச்சியான இல்லம். ஆனால், அவர்களிடமிருந்து இவர் பெற்ற அனுபவங்களோ மோசமானவை. வெளி உலகினராலும் இவர் புறக்கணிக்கப்பட்டார். அனைத்துமே அவருக்கு இருந்தன, அனைத்துமே தொலைந்தும் போயின. இன்று, அவரது புன்னகை மட்டுமாவது அவரிடம் திரும்ப வந்திருக்கிறது.

உதவும் கரங்களில், 27 ஆண்டுகளுக்கும் மேலாக நாங்கள் பல முதியவர்கள், ஆதரவற்றோர், நோயுற்றோர் மற்றும் கைவிடப்பட்டவர்களை பராமரித்து வருகிறோம். உங்கள் ஆதரவுடன், இதுபோன்ற பலருக்கு எங்கள் முயற்சிகள் எட்டுவதை நாங்கள் உறுதி செய்ய இயலும்.

வருமான வரிச்சட்டம் 35AC மற்றும் 80Gயின் கீழ்
உங்கள் நன்கொடைகளுக்கு விலக்கு உள்ளது.
மேலும் தகவல் அறிய: www.udavumkarangal.org என்னும் இணையதளத்திற்குச் செல்லவும்

UDAVUM
KARANGAL



460, N.S.K. Nagar, Chennai - 600106. Ph: 044- 2622 2161, 2621 6321
Fax: 044 - 2626 7624, E-mail: udavum@vsnl.com




'**அ**வர்களும் இவர்களும்' படத்தில் நடிக்கிறார் இயக்குநர் அகத்தியன். வான்மதி, காதல் கோட்டை படங்களில் அவரது உதவி இயக்குநர் வீரபாண்டியன்தான் இந்தப் படத்தின் இயக்குநர் என்பதால் அகத்தியனால் மறுக்கமுடியவில்லையாம். ''நான், 'காலமெல்லாம் காதல் வாழ்க' ஆர். பாலு விடமும் உதவி இயக்குநரா ஒர்க் பண்ணிருக்கேன். என்னைப் பாதித்த இரண்டு காதல்களை ஒரு திரைக்கதையில் இணைத்திருக்கிறேன். காதல் - உயிரைப் பூக்க வைக்கிற அனுபவம். ஆனால், போதுமான புரிதல் இல்லாமல் வாழ்க்கையை இழப்பவர்கள் காதலைக் குறை சொல்கிறார்கள். அதைத் தகர்க்க ஈர்ப்பும் இனிப்புமாகப் படத்தை எடுத்திருக்கிறேன்'' என்கிறார் வீரபாண்டியன். இவர் கடைக்கால் என்கிற சிறுகதைத் தொகுப்புக் குச் சொந்தக்காரர்.

'**ம**னசே மௌனமா' படத்தில் வில்லத்தனமான கல்லூரி மாணவனாக நடித்த யுவராஜ் கதாநாயகனாக அறிமுகமாகும் படம் பகவான். ஒரு மனிதன் வசம் கத்தியும் இருக்கிறது; பேனாவும் இருக்கிறது. அவன் எதைத் தெரிவு செய்ய வேண்டும் என்பதை இந்தச் சமுதாயம்தான் தீர்மானிக்கிறது. என் நாய கனும் கத்தியை எடுக்கிறானா... பேனா எடுக்கிறானா? என்பதுதான் படத்தின் சுவாரஸ்யம் என்கிறார் இயக்குநர் ஏ.ஆர்.சைலேஷ். சூட்டிங் ஸ்பாட்டுக்குத் தற்செயலாக வந்த ஒரு தெலுங்கு பட அதிபர், சைலேஷின் இயக்கும் திறமை யைப் பார்த்து அடுத்த படத்தை இயக்குவதற்கு வாய்ப்பையும் அட்வான்ஸையும் கொடுத்திருக் கிறார்.

**கோ**லிவுட்டில் சமீபத்தில் எல்லோரையும் கலங்க வைத்த மரணம் நடிகர் முரளியினுடையது. அவர் நடித்த நூறாவது படம் கவசம். நேர்மையான போலீஸ் அதிகாரியாக இந்தப் படத்தில் நடித்திருக்கும்

முரளி, இதுவரை நடித்த தொண்ணூற்று ஒன்பது படங்களில் ஒன்றில்கூட போலீஸாக நடித்ததில்லை. 'இந்தப் படம் வரட்டும் நான் மீண்டும் பிஸியாகி விடுவேன்' என்றாராம் முரளி. ஓர் அண்ணன் தம்பி மீது அளவுக்கு அதிமாக வைக்கும் பாசம்தான் படத்தின் அடிநாதமாம். இந்தப் படத்தின் தயாரிப்பாளர் நந்திவரம் பா.சம்பத்குமார், மரியா மனோகர் இசையில் நான்கு பாடல்களை எழுதியிருக்கிறார்.

**ரா**மன் தேடிய சீதை படத்தில் சேரனுடன் நடித்த மூன்று ஹீரோயின்களில் ஒருவரான ரம்யாநம்பீசன், இப்போது ஆட்ட நாயகன் படத்தில் மெயின் ஹீரோயின். கேரளத்து வரவுகள் தமிழில் சோடை போனதில்லை. உதாரணம் அசின், நயன் தாரா, மீரா ஜாஸ்மின். ''அந்த வரிசையில் நானும் வரணும்னு ஆசைப்படறேன். மலையாளத்தில் நடிகைகள் கொஞ்சம் குண்டாக இருக்க வேண்டுமென்று ரசிகர்கள் விரும்புவார்கள். ஆனால், தமிழில் ஒல்லி நடிகைகளுக்குதான் மதிப்பு. ஆட்டநாயகன் படத்தில் நடிப்பதற்காக நான் ஐந்து கிலோ உடல் எடையைக் குறைத்திருக்கிறேன்'' என்கிறார் ரம்யாநம்பீசன்.

**கா**வலன் படத்தின் பத்திரிகையாளர் சந்திப்பில் விஜய், '' இயக்குநர் சீமான் என்னிடம் ஒரு கதை சொன்னார். அந்தக் கதை எனக்குப் பிடித்திருக்கிறது. அதில் நான் நடிப்பேன்'' என்று சொன்னார். ஆனால், வேலாயுதம் கிடப்பில் போடப்பட்டிருப்பதன் ரகசியம் தான் என்ன என்று தெரியவில்லை. இது குறித்து கேட்டபோது, ''காவலன் படத்துக்குப் பிறகுதான் வேலாயுதம்'' என்றார் விஜய்.



* ஜெனிலியா

''நான் நடிக்கும் தமிழ் படமான உத்தம புத்திரன் ஏறக்குறைய முடிந்துவிட்டது. வேலாயுதம் எப்போ ஆரம்பிப்பாங்கன்னு தெரியலை. இதற்கிடையில் வேறு ஒரு தமிழ்ப் படத்தில் நடிக்க ஒப்பந்தமானால் என்ன என்றும் யோசித்து வருகிறாராம் அந்தப் படத்தின் நாயகி ஜெனிலியா!



* பகவான்



* அவர்களும் இவர்களும்




* கலசம்

# சக்ஸஸ் ஸ்டோரி

1956செப்டெம்பர் 1ஆம் தேதி உருவான எல்.ஐ.சி.க்கு 2010 செப்டெம்பரோடு 54 ஆண்டுகள் நிறைவு பெற்றது. இந்தியாவில் இன்று இன்சூரன்ஸ் என்றாலே அனைவருக்கும் நினைவுக்கு வருவது எல்.ஐ.சி.தான். இந்தியாவின் ஜி.டி.பி.யில் 1.84 சதவிகிதம் பங்களிப்பைச் செய்கிறது எல்.ஐ.சி.

எல்.ஐ.சி.யின் இந்த அபார முன்னேற்றத்துக்குப் பின்னே பல காரணங்கள் இருக்கின்றன. இந்தியாவின் வளர்ச்சியோடு எல்.ஐ.சி. தன்னை முழுமையாக இணைத்துக்கொண்டதே அதன் வளர்ச்சிக்கு அடித்தளம். இன்றைக்கும் இந்தியப் பங்கு சந்தையில் ஏதேனும் சரிவு ஏற்பட்டால் உடனடியாக வந்து காப்பாற்றுவது எல்.ஐ.சி.யின் முதலீடுகள்தான்.




2009-10 ஆம் நிதியாண்டில் எல்.ஐ.சி.திரட்டிய பிரீமியம் ரூ. 1.8 இலட்சம் கோடிகள். 2010-11ஆம் நிதியாண்டில் அதையே ரூ. 2 லட்சம் கோடியாக உயர்த்த திட்டமிட்டிருக்கிறது.

மற்ற தனியார் இன்குரன்ஸ் நிறுவனங்களை விட, எல்.ஐ.சி.யின் மார்க்கெட் ஷேர்தான்



## உங்கள் நலன் எங்கள் பொறுப்பு!

காலத்துக்கேற்ப குழந்தைகளுக்கு, பெண்களுக்கு ஸ்பெஷல் இன்சூரன்ஸ் திட்டங்களை எல்.ஐ.சி. அறிமுகப்படுத்தியுள்ளது.

பாலிசிக்களுக்காகச் செலுத்தப்படும் பிரீமியத்துக்கு வரிச் சலுகை மிகவும் பயனளித்தது.

வறுமைக்கோட்டுக்குக் கீழுள்ள மக்களுக்காக அறிமுகப்படுத்தப்பட்டது ஜனஸ்ரீ பிமா யோஜனா. இந்தப் பாலிசிக்காகச் செலுத்தப்படவேண்டிய பிரீமியத்தில் பாதியை அரசாங்கம் செலுத்திவிடுகிறது.

எல்.ஐ.சி. சின்னம் ஒரு விளக்கை இரு கைகள் குவிந்து பாதுகாப்பது போல உள்ளது. இதில் எழுதப்பட்டுள்ள 'யோக க்ஷேமம் வஹாம் யஹம்' என்ற சமஸ்கிருத வாசகத்துக்குப் பொருள்: உங்கள் நலன் எங்கள் பொறுப்பு.

நாடெங்குமாக எல்.ஐ.சி.க்கு பத்து இலட்சத்துக்கும் அதிகமான ஏஜெண்ட்கள் உள்ளனர். உலகிலேயே மிக அதிகமான முகவர்கள் உள்ள நிறுவனம் எல்.ஐ.சி.தான்.

ஒரு கோடி ரூபாய்க்கு மேல் எல்.ஐ.சி. பாலிசி எடுத்துள்ள தனி நபர்களின் எண்ணிக்கை சுமார் 1200.

அதிகம். 71.68 சதவிகித மார்க்கெட் ஷேர் கொண்ட இதன் மொத்த சொத்தின் மதிப்பு ரூ. 11.52 இலட்சம் கோடிகள். 1956 இல் எல்.ஐ.சி. உருவானபோது அதன் மதிப்பு ரூ. 348.68 கோடிகள் மட்டுமே.

எல்.ஐ.சி.யின் துரித வளர்ச்சிக்கு முக்கிய காரணம், அதன் ஏஜெண்டுகள். இந்தியா வெங்கும் ஏறத்தாழ 14 இலட்சம் ஏஜெண்டுகள் இருக்கிறார்கள். இந்த நிதியாண்டில் இன்னும் 1.5 இலட்சம் ஏஜெண்டுகளை எல்.ஐ.சி நியமிக்க இருக்கிறது.

காப்பீட்டு கிளைம்களை ஏற்றுக்கொண்டு, அதற்கு உரிய பணத்தைக் கொடுத்து, முதல் இடத்தில் இருக்கிறது. 2009-10ல் மட்டும் 2.11 கோடி கிளைம்களை செட்டில் செய்திருக்கிறது. செட்டில்மெண்ட் தொகை மட்டும் ரூ.53954 கோடிகள்.

எல்.ஐ.சி.யில் கட்டப்படும் பிரீமியம் தொகைக்கு வரிவிலக்கு உண்டு என்ற காரணத்தாலேயே பல தனிநபர்கள் காப்பீடுகளை எடுத்துக்கொள்கின்றனர். அதிலும் எல்.ஐ.சி. காப்பீடுகளை எடுத்துக்கொள்கிற

# எல்லாம் வல்ல எல்.ஐ.சி.!

இன்னொரு முக்கிய காரணம், எல்.ஐ.சி இந்திய அரசின் ஒரு நிறுவனம். அதனால், அதில் போடப்படும் பணம் பத்திரமாக இருக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே இருக்கிறது.

அதேபோல், ஆயுள் காப்பீட்டுத் துறையில் வரும் கிளைம்களை உடனுக்குடன் செட்டில் செய்வதில் எல்.ஐ.சி.யை மிஞ்ச ஆளே இல்லை. கிட்டத்தட்ட 95 சதவிகிதம் வர்கள் அதிகம். காரணம், பல சமயங்களில், அதன் பிரீமியம் தொகை அதிகமாக இருந்தாலும், அது தரக்கூடிய ஆயுள் காப்பீடு முழுமையானது. அசம்பாவிதம் நடக்கும் போது கிடைக்கும் செட்டில்மெண்ட் தொகையும் ஓரளவுக்கு அதிகம்.

மேலும், எல்.ஐ.சி. இன்று பல உபதுறைகளில் காலை நன்கு ஊன்றிக்கொண்டு விட்டது. வீட்டுக்கடன் வழங்குதல், மியூச்

சுவல் பண்டு, பிற நாட்டுக் கிளைகள் என்று தம் எல்லைகளை விரித்துக் கொண்டே செல்கிறது.



எல்.ஐ.சி.யின் வெற்றிக்குப் பின்னே மற்றொரு முக்கிய காரணம் இருக்கிறது. அது காலத்துக்கு ஏற்ப புதிய பாலிசிகளை உருவாக்கும் வேகம். குறிப்பாக, 1991க்குப் பிறகு தனியார் இன்சூரன்ஸ் நிறுவனங்கள் இந்தியாவில் தம் செயல்பாடுகளைத் தொடங்கிய பின்னர், போட்டி அதிகமானது.

இந்தப் போட்டியில் எப்படியும் வெற்றி பெற்றுவிட வேண்டிய அவசியம் எல்.ஐ.சி.க்கு. இல்லையெனில், தனியார் நிறுவனங்கள், முந்திக்கொண்டுவிடக் கூடும்.

இந்த நிலையில்தான், எல்.ஐ.சி. புதிய ஆயுள் காப்பீட்டுத் திட்டங்களை உருவாக்கி வெளியிடத் தொடங்கியது. தனிநபர் காப்பீடு, குழு காப்பீடு, ஓய்வூதியத் திட்டங்கள், யூலிப் திட்டங்கள் என்று ஒவ்வோர் ஆண்டும் புதிய திட்டங்களைச் சந்தைக்குக் கொண்டு வந்தது எல்.ஐ.சி.

மேலும், இன்றைக்கு இன்சூரன்ஸைக் காப்பீடாக மட்டும் பார்க்காமல், அதை ஒரு முதலீடாகவும் பார்க்கத் தொடங்கி விட்டார்கள். குழந்தைகளின் எதிர்காலம் என்ற முக்கிய அம்சமும் இன்று முதலீட்டோடு சேர்த்துப் பார்க்கப் படுகிறது.

மக்களின் சுவைக்கு ஏற்ப, தேவைக்கு ஏற்ப, கால மாற்றத்துக்கு ஏற்ப, புதிய புதிய திட்டங்களைக் கொண்டுவருவதுதான் எல்.ஐ.சி.யின் வெற்றிக்கு அடிப்படையாக இருக்கிறது. எது சிறந்த பாலிசி, எது நல்ல வருவாய் தரும் என்று நான்கு பேர் ஒன்றாகச் சேர்ந்து பேசினால், அதில் குறைந்தது ஜீவன் சரள், ஜீவன் ஆனந்த... இரண்டு மூன்று எல்.ஐ.சி. பாலிசிகளேனும் இடம் பெறாமல் போகாது.

இந்தியாவின் தவிர்க்க முடியாத பெயராக எல்.ஐ.சி. மாறியது இப்படித்தான்.

– சந்திரமௌலி



**“2009-10 நிதியாண்டில் எல்.ஐ.சி. திரட்டிய பிரீமியம் தொகை 1.8 லட்சம் கோடி ரூபாய்!”**

நாடக விமர்சனம்

# சென்னைக்கு வந்த ஹிச்காக்!

எதிர்பாராதது - இந்தப் பெயரில் சஸ்பென்ஸ் த்ரில்லர் நாடகம் ஒன்றை மேடை ஏற்றி இருக்கிறார் டைரக்டர் வெங்கட். இவர் எங்கே பிராமணன் சீரியலின் இயக்குநர்! இவருக்கு நாடகம் தாய் வீடு.



''ரெண்டு வருடங்களாக எங்கே பிராமணன் தொடரில் பிசி. அது முடிந்ததும் சின்ன பிரேக் எடுத்துக்கொண்டு நாடகம் ஒன்று எழுத முடிவு செய்தேன். நான் நாடகத்திலிருந்து விலகி இருந்த காலகட்டத்தில் டம்மீஸ், குருகுலம் போன்ற புதிய நாடகக் குழுக்கள் சில அற்புதமான நாடகங்களைப் போட்டிருக்கிறார்கள். எனவே, நானும் என்னுடைய இரண்டாம் இன்னிங்சில் ஏதாவது புதிதாக முயற்சி செய்ய விரும்பினேன். அதன் பலன்தான் இந்த எதிர்பாராதது நாடகம்'' என்கிறார் வெங்கட்.

''இந்த நாடகத்துக்கு இன்ஸ்பிரேஷன் ஆல்ப்ரெட் ஹிச்காக்கின் 'பின்புற ஜன்னல்' என்ற த்ரில்லர்தான். அதில் சக்கர நாற்காலிக்காரர் ஒருவருக்குத் தம் வீட்டில் அமர்ந்தபடியே அக்கம் பக்கத்து வீடுகளில் நடப்பதை பைனாகுலரில் பார்த்துக் கொண்டிருப்பது வழக்கம். ஒரு நாள் ஒரு வீட்டில் கணவன் தம் மனைவியைக் கொலை செய்வதை பைனாகுலர் மூலம் பார்த்துவிடுகிறார். கொலைகாரனுக்கு இந்த விஷயம் தெரிய அவன் பைனாகுலர்காரரைக் கொலை செய்ய முயற்சிக்கிறான். நிறைவேறியதா என்பது ஹிச்காக் கொடுத்த சஸ்பென்ஸ்'' என்கிறார் வெங்கட்.

ஆனால், எதிர்பாராது நாடகத்தில் வரும் சக்கர நாற்காலிக்காரரும் பைனாகுலர் மூலமாக ஒரு கொலையைப் பார்த்துவிடுகிறார். கொலைகாரர் சக்கர நாற்காலிக்காரரைக் கொலை செய்ய வருகிறார். அங்கேதான் வெங்கட் கதையில் ஒரு எதிர்பாராத ட்விஸ்டைக் கொடுக்கிறார். சக்கர நாற்காலிக்காரர் நடந்ததாக நினைக்கும் கொலை உண்மையில் நடக்கவேயில்லை. அப்படியானால், நாடகத்துக்குள்ளே இப்படி ஒரு நாடகம் ஏன்? இங்கேதான் வெங்கட்டின் கைவண்ணம் பளிச்சிடுகிறது.

சுந்தரராஜன், சிவாஜி சதுர்வேதி, சங்கீதா பிரகாஷ் பாலு.... என எல்லோரும் அலட்டிக்காமல் நடிப்பது பாராட்டுக்குரியது. ஆரம்பத்தில் கொஞ்சம் ஸ்லோவாக நகர்ந்தாலும், நாலாவது சீனுக்குப் பிறகு நாடகம் சூடு பிடித்துவிடுகிறது. இதுபோன்ற நாடகங்களைப் பார்த்து, ரசித்துக் கைதட்டினால், ஐ.சி.யு.வில் இருக்கும் தமிழ் நாடகம், கொஞ்சம் தெம்பாகி, ஜெனரல் வார்டு வரையாவது வரும். நாடகம் பார்த்துவிட்டு நாடக ஆரம்பக் காட்சிகளின் தொய்வு பற்றி டைரக்டர் வெங்கட்டிடம், ரசிகர்கள் குறிப்பிட்டபோது அதை ஏற்று, ஆரம்பக் காட்சிகளை டிரிம் பண்ணிவிட்டதாகத் தெரிவித்தார்.

- கௌதம் ராம்



# கல்கி




2010 அக்டோபர் 3
விக்ருதி புரட்டாசி 17
மலர் : 69
இதழ் : 10


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## நம்பிக்கையூட்டும் நீதித்துறை நிகழ்வுகள்!

நீதிமன்றங்களில் வழக்குகள் குவிந்து கிடக்கின்றன; தாமதப் படுத்தப்படுகின்றன. மக்களுக்கு நீதி கிடைப்பதில் ஏற்படும் தாமதம், நீதி மறுக்கப்படுவதற்குச் சமம் என்பது போன்ற விமர்சனங்கள் நாளிதழ்களில் இடம்பெறுகின்றன. இவற்றுக்கிடையே, சமீபத்திய இரு செய்திகள் நீதித்துறை மீது நம்பிகையை வலுவடையச் செய்துள்ளன.

முதலாவதாக, இந்தியா சிமெண்ட்ஸ் அதிபரான ஸ்ரீநிவாசன், தமது நிறுவனத்தின் மூலம் சென்னை சூப்பர் கிங்ஸ் அணியை ஏலத்தில் எடுத்துவிட்டு, இந்திய கிரிக்கெட் வாரியத்திலும் அங்கம் வகிக்கலாகாது; ஒன்றுக்கு ஒன்று தொடர்பில்லை என்று வாதாடுவதும் சரியல்ல என்ற கருத்தை (தீர்ப்பு அல்ல) உச்சநீதிமன்ற நீதிபதி கியான் சுதா மிச்ரா வெளியிட்டிருக்கிறார். ஐ.பி.எல். கிரிக்கெட் தொடர்பாக, இந்திய கிரிக்கெட் வாரிய விதிமுறைகள் சில மாற்றப்பட்டது குறித்த வழக்கில், இக்கருத்தை மாண்பமை நீதிபதி கியான் சுதா மிச்ரா கூறியதுடன், இரண்டில் ஒன்றை வழக்கு முடியும் வரையிலாவது துறந்துவிடுங்கள் என்று அறிவுரையும் வழங்கி உள்ளார்.

இந்த அறிவுரை, பொதுவாழ்விலும் அரசியலிலும் ஈடுபட்டுள்ள அனைவருக்குமே பொருந்தும். அரசு அதிகாரத்தில் இருப்பவர்கள் அத்துறையுடன் தொடர்புள்ள வேறு தனியார் நிறுவனத்தில் நேரடியாகவோ மறைமுகமாகவோ பங்குதாரராக விளங்கி லாபம் சம்பாதிக்க முயற்சி செய்வது தார்மிக நெறிகளுக்கு விரோதமானது.




பதவியின் செல்வாக்கைத் துஷ்பிரயோகம் செய்யவும் முறைகேடுகளை மூடி மறைக்கவும் இது இடம்கொடுக்கும். மேலும், பொதுவாழ்வில் ஒரு குற்றச்சாட்டைச் சுமந்துள்ள ஒருவர், விசாரணை முடியும்வரை பதவியிலிருந்து விலகி நிற்பதே நியாயம். ஆனால், சட்டப்படி சரியாக இருக்கக்கூடிய காரியங்கள், தார்மிக ரீதியில் பெரும் குற்றங்களாக அமைந்துவிடுவதை நீதிமன்றங்கள் சுட்டிக்காட்ட ஆரம்பிக்கும்போது, தார்மிக நெறிகள் பலப்படுகின்றன. அந்த அளவில் நீதிபதி கியான் சுதா மிச்ராவின் கருத்து வரவேற்கப்பட வேண்டிய ஒன்று.

இரண்டாவது செய்தி, சென்னை உயர்நீதிமன்றத்தின் மதுரை கிளையில், ஒரே வாரத்தில் ஒரே நீதிபதி ஆயிரம் வழக்குகளை ஃபைசல் செய்த அபூர்வ நிகழ்வு.

அரசுப் பணி, கல்வி தொடர்பான ரிட் மனுக்களை ஆராயும் பொறுப்பு வழங்கப்பெற்ற நீதிபதி கே.சந்துரு, மிகுந்த சிரத்தையுடன் செயல்பட்டிருக்கிறார். பதவியேற்ற (செப்டம்பர் 6) முதல் மூன்று நாட்களுக்கு, நிலுவையில் இருந்த வழக்குகளின் தன்மையை எடை போட்டிருக்கிறார். அடுத்த நான்கு நாட்கள் அரசு விடுமுறையான போதிலும், அவ்வழக்குகளை வகைப்படுத்தி இருக்கிறார். ஒரே பிரிவின் கீழ் ஆராயப்படக்கூடியவற்றைத் தொகுத்து, அவற்றைத் தாம் தொகுத்த வகையில் பட்டியலிடும்படி நீதிமன்ற ஊழியர்களைப் பணித்திருக்கிறார். இவ்வாறு தொகுக்கப்பட்ட பின், ஒரே அடிப்படைகளைக் கொண்ட மனுக்கள் ஒரு தொகுதியாக அணுகப்பட்டு, தீர்ப்புகள் விரைந்து வழங்கப்பட்டுள்ளன. இதனால், நீண்ட நெடுங்காலமாகத் தவித்த மக்களுக்கு நிவாரணம் கிடைக்க வழி பிறந்துள்ளது.

நீதிபதிகள் மனம் வைத்தால் இந்நாட்டில் நிலுவையில் உள்ள வழக்குகளைக் கணிசமாகக் குறைக்க முடியும் என்ற உறுதியை உருவாக்குகிறது நீதிபதி சந்துருவின் செயல்பாடு. வழக்கறிஞர்கள், நீதிமன்ற ஊழியர்கள் உள்ளிட்ட நீதித்துறைக்கு மட்டுமின்றி, நாட்டிலுள்ள அனைவருக்குமே ஒரு முன்னுதாரணமாகச் செயல்பட்டிருக்கிறார் நீதிபதி.

உயர் பதவிகளில் இருப்போரும் சரி, அவர்கள் கீழ் பணியாற்றும் ஊழியர்களும் சரி, உழைப்பார்வத்துடன் சீரிய சிந்தனையை இணைத்து, புதிய நடைமுறைகளை வகுத்துச் செயல்பட்டால் நம் நாடு எதைத்தான் சாதிக்க முடியாது!



மின்னல் கதை

# ஸ்வீட்(டு) கொடுத்தால்!

முத்துலெக்ஷ்மி சங்கரன்

**கா**லை 8 மணி.

வீட்டின் டைனிங் ஹால்.

"டிஃபன் ரெடி பரத், வரியா?" அம்மா அழைத்தாள்.

டேபிளில் உட்கார்ந்தவனின் தட்டில் இட்லி, சட்னியுடன் ஒரு துண்டு மைசூர்பாகும் விழுந்தது.

"என்னம்மா, எனக்கு ஸ்வீட்டே பிடிக்காதுன்னு எத்தனை தடவை சொல்றது...?" என்று சிடுசிடுத்தவனை, "டேய், பிளீஸ்டா கண்ணா, ஒரு அரைத் துண்டு தானே போட்டிருக்கேன். இன்னிக்குப் பண்டிகையாச் சேன்னு தான் பண்ணினேன். எறியாதேடா" என்று தழைந்த குரலில் கெஞ்சினாள் அம்மா.

"ஒரு தடவை எறிஞ்சாதான் அதுக்கப்புறம் போட மாட்டே," மைசூர்பாகு குப்பைத் தொட்டியில் விழுந்தது.

மாலை 8 மணி.

ஃபாஸ்ட் ஃபுட் ஜாயிண்ட்.

"இன்னிக்கு ஸ்வீட் சாப்பிடலாமா பரத்" கேட்டது அபர்ணா.

"ஓ... எஸ்... ஏய் நாட்... நீயே ஆர்டர் பண்ணு" இது பரத். வந்த இனிப்பைப் பார்த்ததும் அம்மாவின் வாடிய முகம் மனக்கண்ணில் தோன்றியது. அதை வலுக்கட்டாயமாக அழித்து விட்டு அபர்ணாவின் முகத்தைப் பார்த்தவாறே 'மைசூர்பா'வை விழுங்கினான் பரத்.

# கல்கி யின்

# கை வண்ணத்தில்










1950 களில்...

1960 களில்...

2000 களில்...

1980 களில்...

கல்கி தீபாவளி மலர் 1980



தொடர்ச்சியாக

படிக்க...

ரசிக்க...

பரிசளிக்க...

விலை ரூ. 120 மட்டும்

தயாராகிக் கொண்டிருக்கிறது

தித்திப்பான அனுபவங்களுடன்

# கல்கி தீபாவளி மலர் 2010

உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்யுங்கள் அல்லது கூரியர் மூலம் பெற ரூ.30 சேர்த்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்: விற்பனை மேலாளர், கல்கி தீபாவளி மலர், கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, சென்னை-600 032. தொடர்புக்கு: 044-43438844.

## பளிச் பரிகாரம்




கே.ஆர்.சுரேந்திரன், விஜயவாடா.

என் மனைவியின் ஜாதகத்தை இணைத்துள்ளேன். அவரின் உடல் ஆரோக்கியத்தில் கடும் பாதிப்புகள் ஏற்பட்டு ஓரளவு சரியாகி உள்ளது. ஆரோக்கியம் இனி சீராக இருக்க என்ன பரிகாரம் செய்ய வேண்டும்?

தினமும் தன்வந்த்ரி பெருமாளை சேவிக்கவும். விஷ்ணு சகஸ்ரநாமத்தில் உள்ள 'வைகுண்ட புருஷ ப்ராண ப்ராணத ப்ரணவப்ருது' என்னும் வரியைச் சொல்லிக் கொண்டே இருங்கள். அவர் பிழைத்து எழுந்து நல்ல ஆரோக்கியமாகி நெடுநாள் வாழ்வார்.

ஆராவமுதன், கும்பகோணம்.

பெயரை மாற்றிக் கொண்டால் விதி மாறிவிடும் என்னும் கருத்து அண்மைக் காலமாகப் பலராலும் கூறப்பட்டு வருகிறதே? இது உண்மையா?

எனக்கு அதில் சிறிதும் நம்பிக்கை இல்லை. ஆங்கில எழுத்துகளுக்கு ஏற்ப நவக்கிரகங்களின் பலன் மாறுபடாது. இது வெறும் மூடநம்பிக்கை மட்டுமல்ல. தமிழ்மொழியை இழிவுபடுத்தும் செயல்.

கலைச்செல்வி, மதுரை.

எனது இரண்டு மகள்களுக்கும் வரன் பார்த்து வருகிறோம். இருவருக்கும் ஒரே மேடையில் திருமணம் செய்ய திட்டமிட்டுள்ளோம். அவ்வாறு செய்வது தவறு எனச் சிலர் கூறுகின்றனர். தங்கள் கருத்து என்ன?

இரு மகள்களுக்கும் ஒரே மேடையில் திருமணம் செய்யலாம். அதில் தவறு ஒன்றும் இல்லை. கண் திருஷ்டி படக்கூடும் என்பதால் அதைச் சிலர் தவிர்க்கின்றனர். அக்காள், தங்கைக்கு ஒரே நேரத்தில் திருமணம் செய்வதை நமது சாஸ்த்திரம் அனுமதிக்கின்றது.

# ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

# விதி மாறுமா?



எஸ்.கோபாலகிருஷ்ணன், புதுதில்லி.

ஒரே மாதத்தில் இரண்டு முறை ஜென்ம நட்சத்திரம் வந்தால் எதில் பிறந்தநாள் கொண்டாடுவது? ஒரே திதி இரண்டுமுறை வந்தால் எதில் திவசம் செய்வது?

இரண்டாவதாக வரும் நட்சத்திரத்தில் பிறந்த நாள் கொண்டாட வேண்டும். ஆயுஷ் ஹோமம் செய்வது, கோவிலுக்குச் சென்று அர்ச்சனை பண்ணுவது, சஷ்டி அப்த பூர்த்தி, பீமரத சாந்தி, சதாபிஷேகம் உட்பட அனைத்துப் பிறந்த நாள் கொண்டாட்டத்துக்கும் இரண்டாவதாக வரும் ஜென்ம நட்சத்திரத்தை எடுத்துக்கொள்வதுதான் சரி. குடும்பத்து முன்னோர்களுக்குச் செய்யும் வருடாந்தர திவசத்துக்கு முதலில் வரும் திதியைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும். இரண்டாவதாக வரும் திதி வரை பிதுர்க்களைக் காக்க வைக்கக்கூடாது.



உங்கள் கேள்விகளை ஜாதகக் குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

இலட்சக்கணக்கான மக்களின் சாவுக்குக் காரணமாக இருந்த ஹிட்லருக்கும், பிரிட்டிஷ் பிரதமர் சர்ச்சிலுக்கும் பெரிய வித்தியாசம் இல்லை. வங்காளத்தில் 1943-ல் ஏற்பட்ட பெரும் பட்டினிச் சாவுகளில் சுமார் முப்பது இலட்சம் மக்கள் பட்டினியால் சாவதற்குக் காரணமாக இருந்தவர் சர்ச்சில்தான் என்று இந்திய விஞ்ஞானியும் எழுத்தாளருமான மதுஸ்ரீ முகர்ஜி குற்றம் சாட்டியிருக்கிறார்.

இயற்பியல் படித்துவிட்டு உயர்படிப்புக்கு அமெரிக்கா சென்ற மதுஸ்ரீ, சயண்ட்டிஃபிக் அமெரிக்கன் இதழின் முன்னாள் ஆசிரியர். தற்போது ஜெர்மனியில் வசிக்கும் மதுஸ்ரீ, இதற்கு முன்பு அந்தமான் தீவுகளில் வாழும் ஆதிவாசிகள் பற்றிய நூலை எழுதியிருக்கிறார்.

வங்காளப் பஞ்சம் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வத்துடன் தம் ஆய்வைத் தொடங்கிய மதுஸ்ரீ, பிரிட்டிஷ்

# சர்ச்சில்



நூலகத்தில் இருக்கும் பல்வேறு ஆவணங்களை ஆராய்ந்ததில் முப்பது இலட்சம் மக்களின் சாவுக்கு சர்ச்சில் பொறுப்பேற்றுதான் ஆகவேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். எனவே, தம் நூலுக்கு சர்ச்சிலின் இரகசிய யுத்தம் (சர்ச்சில்ஸ் சீக்ரெட் வார்) என்றே பெயரிட்டிருக்கிறார்.

இந்தியாவில் சர்ச்சிலுக்குத் தமிழ்நாட்டில் திருச்சி உறையூரில் தயாரித்த சுருட்டுகள் மிகவும் பிடித்தவை. ஆனால், இந்தியர்களை அறவே பிடிக்காது. ஹிட்லருக்கு எப்படி யூதர்கள் மீது வெறுப்பு இருந்ததோ, அதேபோல சர்ச்சிலுக்கும் இந்தியர்கள் மீது கடுமையான இனத்துவேஷம் இருந்தது. லண்டனில்

பாரிஸ்டர் பட்டம் பெற்றவரான காந்தியை, அரை நிர்வாணப் பக்கிரி என்று வர்ணித்தது சர்ச்சில்தான். இந்தியர்களால் தங்களைத் தாங்களே ஆள முடியாது. சுதந்திரம் கொடுத்தால் சிதறி சின்னாபின்னமாகிப் போய்விடுவார்கள் என்று சொன்னார் சர்ச்சில். இன்று அவருடைய பிரிட்டனில் சுதந்திர இந்தியாவில் கல்வி பெற்றுத் தகுதியடைந்த இந்திய டாக்டர்களுக்குத்தான் மிகப் பெரிய கிராக்கி.



ஞாநி

இரண்டாம் உலக யுத்தத்தின்போது பிரிட்டிஷ் மக்களின் ஹீரோவாக சர்ச்சில் இருந்தார். ஆனால், யுத்தம் முடிந்ததும் நடந்த தேர்தலில் அவர் கட்சி ஆட்சியை இழந்தது.

சர்ச்சிலுக்கு இந்தியா மீதும் இந்தியர்கள் மீதும் இருந்த வெறுப்புக்கு அளவே

# இன்னொரு ஹிட்லர்?

இல்லை. 1940-ல் முஸ்லிம் லீக் உருவாகி காங்கிரசுக்குப் போட்டியாக அரசியல் செய்தபோது, சர்ச்சிலின் கருத்து என்ன தெரியுமா? "ரொம்ப நல்லது. சிக்கிரமே ஹிந்துகளும் முஸ்லிம்களும் அடித்துக் கொண்டு சாகட்டும். இரத்தக் களறி ஏற்படட்டும்."

அப்படிப்பட்டவர் 1943-ல் வங்காளத்தில் பெரும் பட்டினிச் சாவுகள் ஏற்பட்டபோது, மூர்க்கத்தனமாக உதவிசெய்ய மறுத்தார் என்பதை, மதுஸ்ரீ தம் ஆய்வில் வெளிப்படுத்தி இருக்கிறார். இந்தப் பட்டினிச் சாவுகள் மிகவும் கொடுமையானவை. உண்மையில் உணவு போதாததால் மட்டுமோ, அடுத்த விளைச்சல் சரியாக நடக்காததினால் மட்டுமோ மக்கள் சாகவில்லை. உணவு போதாமல் போனதற்குக் காரணம் பிரிட்டிஷ் இராணுவம்.

சர்ச்சிலின் அரசு வங்காளத்தில் இருந்த எல்லாக் கோதுமையையும் தம் இராணுவத்துக்கு வாங்கி முடக்கத் தொடங்கியது. இதனால் வெளி மார்க்கெட்டில் அரிசி உட்பட எல்லாத் தானியங்களின் விலைகளும் ஏறின. பர்மாவிலிருந்து அரிசி வருவது வழக்கம். அதை வரவிடாமல் சர்ச்சிலின் அரசு செய்துவிட்டது. ஜப்பானியர்கள் பர்மா வழியே நுழைந்தால், அவர்கள் வசம் ஒரு படகு, மாட்டு வண்டி, யானை, கார் எதுவும் கிடைக்கக் கூடாதென்று முன்கூட்டியே வங்க பர்மா எல்லைகளில் இருந்த எல்லாவிதமான வாகன வசதிகளையும் அங்கிருந்த அரிசியையும் கூட பிரிட்டிஷ் இராணுவம் கைப்பற்றிவிட்டது. இந்தப் படகுகளிலும் வண்டிகளிலும்தான் பர்மாவிலிருந்து அரிசி வர வேண்டும். அதற்கு வழியில்லாமல் போய்விட்டது.



பக்கங்கள்

தனியார் சரக்குக் கப்பல்கள் முதல் இராணுவக் கப்பல்கள் வரை இந்தியப் பெருங்கடலில் இருந்த எல்லாக் கப்பல்களையும் இராணுவம் தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொண்டது. ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமையை

வரவழைத்து வங்காளத்துக்குத் தரும்படி வைசிராய் லின்லித்கோ சர்ச்சிலைக் கேட்டார். சர்ச்சில் மறுத்துவிட்டார். இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் நிர்வாகிகள் அமெரி, வேவல்... ஆகியோரும் சர்ச்சிலுக்கு இங்கிருக்கும் மோசமான நிலையைத் தெரிவித்து உடனே உணவு அனுப்ப ஏற்பாடு செய்யும்படி கேட்டார்கள்.

''பஞ்சத்தால் மக்கள் செத்துக்கொண்டு இருக்கிறார்கள் என்றால், எப்படி காந்தி மட்டும் இன்னமும் சாகாமல் இருக்கிறார்?'' என்று சர்ச்சில் பதில் தந்தி அனுப்பினார். காந்தி, பாவம், வெள்ளையனே வெளியேறு போராட்டம் தொடங்கியது முதல் 1944 வரை சிறையில் இருந்தார்.

ஆஸ்திரேலியாவும் கனடாவும் உணவு அனுப்பத் தயாராக இருந்தபோதும் சர்ச்சில் அதற்குக் கப்பல்கள் தர மறுத்துவிட்டார். எல்லாக் கப்பல்களும் யுத்தத்துக்குத் தேவைப்படுவதாக அவர் சொன்னார். உண்மையில் அமெரிக்கக் கப்பல்கள் முதல் எல்லாமே அப்போது சர்ச்சில் அரசின் கீழ்தான் இருந்தன. உணவுக் கப்பல்களை எல்லாம் பிரிட்டனுக்கு இராணுவத்துக்குத் தானியங்கள் எடுத்துச் செல்லவும், யுத்தம் முடிந்த பிறகு கிரீசிலும் ஐரோப்பாவிலும் தேவைப்படக் கூடிய உணவுகளை ஸ்டாக் செய்வதற்கும் சர்ச்சில் அனுப்பிக் கொண்டிருந்தார். இந்தியாவுக்கு அனுப்பப் போதுமான கப்பல்கள் இருந்தன என்பதை அப்போதைய கப்பல் நடமாட்ட ரிகார்டுகளிலிருந்து மதுஸ்ரீ அம்பலப்படுத்தி இருக்கிறார்.



**இந்த வாரத் திட்டு!**

**வ**றுமைக் கோட்டுக்குக் கீழிருக்கும் ஏழைகளுக்கு இலவசமாக உணவு தானியம் தர முடியாது என்று மறுத்த மன்மோகன் அரசு, இப்போது அவர்களுக்கு இலவசமாக செல்பேசி மட்டும் தரும் விசித்திரத்துக்கு இ.வா.தி.

**இந்த வாரப் புதிர்!**

**ஏ**ன் எந்தக் கட்டடத்தையும் முடிக்காமலே கலைஞர் கருணாநிதி திறந்து வைக்க அவசரப்படுகிறார்? கோட்டூர்புரம் அண்ணா நூலகத்தில் ஒரே ஒரு தளத்தில் குழந்தைகள் பிரிவு மட்டும்தான் தயாராகியிருக்கிறது. ஏன் அவசரத் திறப்பு விழா? நூலகம் பற்றிய தகவல் ஏட்டை ஏன் தமிழில் அச்சடிக்காமல் ஆங்கிலத்தில் மட்டும் அச்சடித்திருக்கிறார்கள்?



உணவு தானியக் கப்பல்கள் வங்கத்துக்கு வருவதாகத் தெரிந்தாலே, உள்ளூரில் பதுக்கி வைத்திருப்பவர்கள் பொருளை வெளியேவிட்டு விலைகள் விழ ஆரம்பிக்கும் என்று இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் நிர்வாகிகள் சர்ச்சில் அமைச்சரவைக்குச் சொன்னதை சர்ச்சில் கண்டுகொள்ளவே இல்லை. ஜப்பான்வசம் பர்மா இருந்த போதும் வங்கத்துக்கு அரிசி அனுப்ப ஏற்பாடு செய்ய தாம் தயார் என்று நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் அறிவித்தார். அந்தச் செய்தியையே வெளியிடக் கூடாது என்று சர்ச்சில் அரசு சென்சார் செய்துவிட்டது.

விளைவாக வங்காளத்தின் கிராமங்களிலெல்லாம் மக்கள் உணவு இல்லாமல் பட்டினியில் தினசரி 5000, 6000 பேர் என்று தெருக்களில் செத்து விழுந்துகொண்டு இருந்தார்கள். அரிசி வடித்த கஞ்சித் தண்ணீரைப் பிச்சையாகக் கேட்டு கொல்

**இந்த வாரப் பூச்செண்டு!**

**த**ம் பஸ்களுக்கு பயோ டீச லைப் பயன்படுத்த முடிவு செய் திருக்கும் மகாராஷ்டிர அரசுக்கு இ.வா.பூ. ஏற்கெனவே ஆந்திர மும், கர்நாடகமும் அரசு பஸ்களில் பயோ டீசலைப் பயன்படுத்து கின்றன. சூழலை மாசுபடுத்துவது குறைவதோடு, வருடத்துக்குப் பதி னைந்து கோடி ரூபாய் மிச்சமாகும் என்றும் மராட்டிய அரசு கணக்கிட் டுள்ளது.

கத்தா நகர வீதிகளில் நுழைந்த கிராம மக்கள் பெரிய பெரிய ஓட்டல்களின் வாசலில் செத்து விழுந்தார்கள். பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் இந்தியாவெங்கும், தமிழ்நாடு உட்பட, பெரியதும் சிறியது மாக சுமார் 40 பஞ்சங்கள் ஏற்பட்டிருக்கின் றன. எல்லாமே பிரிட்டிஷ் சுரண்டலினால் ஏற்பட்டவைதான். மழை பொய்த்ததால் ஏற்பட்ட இழப்பைக்கூட ஈடுசெய்ய அரசி டம் தானியங்கள் இருந்தன. ஆனால், பதுக்கல்காரர்கள் விலையை ஏற்ற அனு மதித்தது. பெரும் பணம் இருந்தவர்கள் மட்டும் தப்பினார்கள். ஏழைகள் ஈசல் போல செத்து விழுந்தார்கள்.

வங்கத்தில் மக்கள் செத்து விழுந்த போதுகூட இந்தியாவிலிருந்து கோதுமை யையும் அரிசியையும் பிரிட்டன் ஏற்றுமதி செய்துகொண்டிருந்தது. ஆறு இலட்சம் டன் தானியங்கள் தேவை என்று வைசி ராய் கேட்டார். சர்ச்சில் அரசு கடைசியில் கொடுத்தது வெறும் 30 ஆயிரம் டன்தான். ஆனால் 71 ஆயிரம் டன் அரிசியை இலங் கையில் ரப்பர் தோட்டங்களுக்கு அனுப் பிற்று.

ஏழாண்டு கால ஆராய்ச்சிக்குப் பிறகு மதுஸ்ரீ இந்த நூலை எழுதியிருக்கிறார். முக்கியமான விஷயம், சர்ச்சில் அரசுக்கு எதிராக அவருக்குக் கிடைத்த ஆவணங்கள் எல்லாமே பிரிட்டிஷ் ஆவணக் காப்பகங் களில் இருந்துதான். இதுதான் நமக்கும் அவர் களுக்கும் உள்ள முக்கியமான வித்தியாசம். இன்னும்கூட நெருக்கடி நிலை பற்றிய ஆவணங் கள் இரகசியமாகவே வைக்கப்பட்டுள் ளன. சம காலத்திலேயே பல ஆவணங் களைத் திருத்தியும் மறைத்தும் வைக்கும் பழக்கம் நம் நிர்வாகங்களுக்கு இருக்கிறது. தகவல் அறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் தகவல் கேட்டால் மறுப்பதற்கும் திரிப் பதற்கும் தயார் நிலையில் இருக்கிறது நிர்வாகம். இந்தச் சூழ்நிலையில் இன் றைய பல அவலங்களை நாளைய வரலாற்று ஆசிரியர்கள் தோண்டியெடுக்கக் கூட வாய்ப்பு இல்லாமல் போய்விடும்.

அப்போது இன்னொரு ஹிட்லர் என்று நாம் அழைக்க வேண்டியவர்களையெல் லாம், இன்னொரு காந்தி என்று அழைப் பதற்கு மட்டுமே கூட ஆவணங்களைத் தயார் செய்துவைத்துவிட்டுப் போகும் ஆபத்து இருக்கிறது! ●

**இந்த வார அதிர்ச்சி!**



**த**ம் தந்தை தம்மை வளர்த்துச் சோறு போட்டுப் படிக்க வைத்து ஆளாக்கின செலவுக்காக அவருக்கு 28 இலட்சம் ரூபாய் தருவதாக டென்னிஸ் வீரர் மகேஷ் பூபதி அப்பாவுடன் ஒப்பந்தம் போட் டுக்கொண்டு பணம் கொடுத்த செய்தி அதிர்ச்சியாக இருக்கிறது. இந்த ஒப்பந்தம் செல்லத்தக்கது அல்ல. இதெல்லாம் பெற்றோரின் கடமை. வருமான வரி ஏய்ப்புக்காக இப்படி ஒப்பந்தம் போடப்பட்டிருப்பது ஏற்க முடியாது என்று கர்நாடக நீதி மன்றம் தெரிவித்துவிட்டது!

# தேவையா திறப்பு!




2008ம் ஆண்டு முதல் தொடங்கிவிட்ட பொருளாதார மந்தத்தில் பல துறைகள் அடிவாங்கியபோது, வளர்ச்சியடைந்த ஒரே துறை காப்பீடுதான். 2008-09ல் 83,000 கோடிக்கு பிரீமியம் வசூல் செய்து புதிய பாலிசிதாரர்களைச் சேர்த்துக்கொண்ட எல்.ஐ.சி, 2009-10ல் 1,10,000 கோடி வருமானத்தை ஈட்டியது. ஆயுள் காப்பீட்டில் வர்த்தகம் செய்யும் மற்ற தனியார் நிறுவனங்கள், பொதுக் காப்பீடு செய்யும் அரசு, தனியார் நிறுவனங்கள் ஆகியவையும் இதே கால கட்டத்தில் தங்கள் வருமானத்தை அதிகரித்துக்கொண்டன என்கிறார் 'பிரீமியம்' என்ற மாத இதழின் ஆசிரியர் கே.நித்யகல்யாணி.

''உலக நிறுவனங்கள் நமது பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்திருந்த 60,000 கோடியைத் திருப்பி எடுத்துக் கொண்ட போது இந்திய பங்குச் சந்தையே ஆட்டம் கண்டுவிடுமோ என்று அஞ்சினார்கள் தொழிலதிபர்கள். ஆனால் ஆபத்பாந்தவனாக 65,000 கோடியை முதலீடு செய்து பங்குச் சந்தை வர்த்தகத்தைத் தடுமாற விடாமல் தடுத்தது எல்.ஐ.சி.தான்'' என்கிறார் கல்யாணி.

மக்கள்தொகை வளர்ச்சிக்கு ஏற்பவும், அவர்கள் தேவைகளை ஈடுகட்டவும் அரசு காப்பீட்டுத் துறை நிறுவனங்கள் போதுமானதுதானா என்ற சிந்தனை 1990களில் தோன்றியது. காப்பீட்டுத் துறை பற்றியும் எதிர்காலப் பாதுகாப்பு பற்றிய புதிய விழிப்புணர்வும் ஏற்பட்டு, நிறைய வர்த்தகம் எதிர்பார்க்கப்பட்ட நிலையில், தாராளமயமாக்கலும், புதிய பொருளாதாரக் கொள்கையும் அறிமுகமாயின.

இதன் பின்னணியில் இருந்தவர்கள் அப்போது பிரதமராக இருந்த நரசிம்மராவும், நிதி அமைச்சராக இருந்த மன்மோகன்சிங்கும்தான்.

''மற்ற சில துறைகளைத் தனியாருக்குத் திறந்துவிட்டது போல காப்பீட்டுத் துறையையும் திறந்துவிட்டுவிடலாம் என்று முடிவு எடுத்தபோது, இடது சாரித் தொழிற்சங்கங்கள் கடுமையாக எதிர்த்தன. அந்த எதிர்ப்பையெல்லாம் மீறி, பல அரசியல் தட்பவெப்ப நிலைகளைக் கடந்து 1999ல் காப்பீட்டுத் துறையைத் தனியாருக்குத் திறந்துவிட அரசு பாராளுமன்றத்தில் அனுமதி பெற்றது. அப்போது வாஜ்பாய் பிரதமர். காப்பீட்டுத் துறையைக் கண்காணிக்கவும், வரைமுறைப்படுத்தவும், புதிய பாதை வகுக்கவும், பொது மக்கள் பணத்துக்குப் பாதுகாப்பை உறுதி செய்யும் வகையிலும் ஐ.ஆர்.டி.ஏ. (Insurance Regulatory and


கல்யாணி

Development Authority) என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டது. தனியார் துறை உற்சாகமுடன் செயல்படத் தொடங்கியது; இன்று நாற்பதுக்கும் மேற்பட்ட தனியார் நிறுவனங்கள் ஆயுள் மற்றும் பொதுக்காப்பீட்டில் வர்த்தகம் செய்கின்றன. தனி நிறுவனங்களில் 26சதவிகிதம் வரை அந்நிய முதலீடு அனுமதிக்கப்பட்டுள்ளது. பெரும்பாலான நிறுவனங்கள் வெளிநாட்டுக் காப்பீட்டு நிறுவனங்களுடன் கூட்டணி அமைத்திருப்பதால் அந்நிய நேரடி முதலீடுகள் 2009 மார்ச் வரை 5000 கோடிக்கு நமது நாட்டிற்கு வந்திருக்கின்றன. அப்படி உருவான முதல் தனியார் நிறுவனம் ராயல் சுந்தரம். தனியார் துறை வந்தால் பொதுத்துறை நிறுவனங்கள் அழிந்து விடும் என்று சொல்லி வந்த தொழிற்சங்கவாதிகளின் வாதம் பொய்த்துப் போனது. மாறாகத் தனியார் நிறுவனங்களுடன் போட்டியிட்டுத் தங்களைத் தக்கவைத்துக்கொள்ள தங்கள் மந்த நிலையை விரட்டியடித்து, சுறுசுறுப்பாகவும் போட்டி மனப்பான்மையுடனும் அரசு நிறுவனங்கள் செயல்படுகின்றன. பொருளாதார சுணக்க காலத்தில் வேலை வாய்ப்பு கொடுத்த ஒரே துறை காப்பீட்டுத் துறைதான்'' என்கிறார் நித்யகல்யாணி.

ஹெல்த் காப்பீடு மக்களை கவர்ந்துவரும் நிலையில் காப்பீட்டுத் துறைக்கு சூப்பரான வர்த்தகம் காத்திருக்கிறது என்கிறார்கள். ''நமது நாட்டில் 2009-10 ஆண்டு முதல் 13.4 கோடி பேர் புது பாலிசிதாரர்களாகச் சேர்ந்திருக்கிறார்கள். நமது மக்கள் தொகையில் இது மிக குறைவு. இந்தியர்கள் காப்பீட்டுக்கு வருடச் செலவு செய்யும் தொகை 2500 ரூபாய்தான். ஆனால் சீனர்கள் 5000 ரூபாய் செலவு செய்கிறார்கள். எனவே வாய்ப்பு வாசலில் காத்திருக்க, எதிர்காலம் காப்பீட்டுத் துறையில் பொற்காலமாக இருக்கும்'' என்கிறார் நித்யகல்யாணி.

- ப்ரியன்

# டோஃபல் எக்ஸாம்னா என்ன?

எக்ஸாம் எக்ஸ்பிரஸ்

வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களில் படிக்கும் ஆசையும் சூழலும் இப்போது நடுத்தர வர்க்கத்துக்கும் வசமாகிவிட்டன. ஆனால், வெளிநாடு சென்று படிக்க நிபந்தனைகள் என்ன? யாரைத் தொடர்புகொள்ள வேண்டும்? தேர்வுகள் ஏதேனும் உண்டா? விவரங்கள் பலருக்கும் தெரிவதில்லை. ஸ்டூடண்ட் விசா மற்றும் பாஸ்போர்ட் இருந்தாலே போதும், வெளிநாடு சென்று படித்து முடித்துவிடலாம் என்பது முற்றிலும் தவறு. ஒவ்வொரு நாடும் தங்கள் நாட்டில் படிக்க விண்ணப்பிக்கும் வெளிநாட்டு மாணவர்கள் சில அடிப்படையான அறிவைப் பெற்றிருக்க வேண்டும் என விரும்புகின்றன. அதற்கென உள்ள நுழைவுத் தேர்வை எழுதி தேர்ச்சிப் பெற்றால் மட்டுமே அந்நாட்டில் மாணவர்கள் படிக்க முடியும். நாட்டுக்கு நாடு நுழைவுத்தேர்வு மாறுபடுவதோடு மட்டுமல்ல; ஒரு நாட்டின் நுழைவுத் தேர்வு மற்ற நாட்டுக்குப் பொருந்தாது.

**ஆஸ்திரேலியாவில் படிக்க வேண்டுமா?**

அதற்கு ஐ.இ.எல்.டி.எஸ். (IELTS) என்ற தேர்வில் தேர்ச்சிபெற்றிருக்க வேண்டும். இந்தத் தேர்வை, மாணவர்கள் தங்கள் கல்வி நிலையத்துடன் தொடர்ந்து ஏற்படக் கூடிய கருத்துப் பரிமாற்றங்களை முற்றிலும் புரிந்துகொள்ள வேண்டும், ஆங்கிலம் எழுத, பேச, புரிந்துகொண்டிருக்க வேண்டும் என்பதற்காக ஆஸ்திரேலிய அரசு கடைப்பிடித்து வருகிறது. ஐ.இ.எல்.டி.எஸ். தேர்வில் இரண்டு விதமான முறைகள் கையாளப்படுகின்றன. ஒன்று கல்வி சம்பந்தமான விஷயங்கள். இரண்டாவது பொதுப்படையான அறிவு. கல்வி சம்பந்தமான விஷயங்கள் குறித்த தாளில் நீங்கள் வெளிநாட்டில் என்ன மாதிரியான படிப்பைப் படிக்க இருக்கிறீர்களோ அது குறித்த கேள்விகள் கேட்கப்படும்.

பொதுத்தாளில் உலகளாவிய ஆங்கில அறிவு, முக்கியமாக பிறநாட்டினர்

வந்து குடியேறுதலில் (இம்மிகிரேஷன்) உள்ள நிபந்தனைகள் குறித்த கேள்விகள் கேட்கப்பட்டிருக்கும். இந்த இரண்டு தாள்களிலும் நீங்கள் தேர்ச்சிபெற்றால் மட்டுமே, நீங்கள் ஆஸ்திரேலியாவில் படிக்கத் தகுதியானவர்கள். இந்தச் சான்றிதழை வைத்தே நீங்கள் ஆஸ்திரேலியாவில் உள்ள எந்த ஒரு கல்வி நிலையத்திலும் சேர முடியும். ஆனால், கல்வி நிலையங்களுக்கு ஏற்ப கட்டணங்கள் மாறுபடும்.

முதுகலைப் படிப்பு, இரண்டு ஆண்டு காலப் படிப்பு என்றால், உங்களுக்கு ஸ்டுடண்ட் விசாவில் இருபத்து நான்கு முதல் முப்பது மாதங்கள் வரைதான் அந்நாட்டில் தங்கியிருக்க அனுமதி. அதையும் தாண்டி கல்வியைத் தொடர விரும்பினால் தூதரகம் மூலம் விசாவை நீட்டிக்கச் செய்ய வேண்டும்.

ஸ்டூடண்ட் விசா மூலம் படித்துக் கொண்டே ஆஸ்திரேலியாவில் பகுதிநேரமாக, முழு நேரமாக வேலைபார்க்க வாய்ப்பும் இருக்கிறது. மாணவர் விசாவில் வந்திருக்கும் மாணவருக்கு வாரத்தில் இருபது மணிநேரமே வேலைபார்க்க அனுமதி!

ஐ.இ.எல்.டி.எஸ் குறித்த தகவல்கள் அறிய : http://www.ielts.org/

**அமெரிக்காவில் படிக்கணுமா?**

மாணவர்கள் விசா, பாஸ்போர்ட் பிரதி, இறுதியாகப் படித்த படிப்புச் சான்றிதழ்களின் நகல்களோடு அமெரிக்கா நடத்தும் டோஃபல் (TOEFL), சேட் (SAT), ஜிமேட் (GMAT) அல்லது ஜிஆர்இ (GRE)ஆகிய மூன்று நுழைவுத் தேர்வில் ஏதாவது ஒன்றில் தேர்ச்சி பெற்றிருக்கும் சான்றிதழையும் இணைத்து அனுப்ப வேண்டும்.

**டோஃபல் தேர்வு:** இத் தேர்வை, 2006-ல் அமெரிக்கா அறிமுகம் செய்தது. இதில் தேர்ச்சி பெற்றிருந்தால் மட்டுமே அமெரிக்காவில் விரும்பிய படிப்பைப் படிக்க முடியும். மாணவர்கள் ஆங்கிலத்தில் புரிந்து

## தரவரிசைப் பட்டியல்

2010 - 2011 -ம் ஆண்டில் உயர்கல்வியில் சிறந்துவிளங்கும் தலைசிறந்த உலகப் பல்கலைக்கழகங்களின் பட்டியலை டைம்ஸ் ஹையர் எஜுகேஷன், ஷாங்காய் ஜியோ டாங் பல்கலைக்கழகம், கியூ எஸ் வேர்ல்ட் பல்கலைக்கழகங்கள் ஆகியன சமீபத்தில் வெளியிட்டன. அந்தப் பட்டியலின்படி, முதலிடத்தில் அமெரிக்காவின் ஹார்வர்டு பல்கலைக்கழகம்; இரண்டாவது அமெரிக்காவின் கலிபோர்னியா இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெக்னாலஜி; மூன்றாவது மசாசாட்ஸ் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெக்னாலஜி; நான்காவது, ஐந்தாவது →



இடங்களில் அமெரிக்காவின் ஸ்டேன்போர்டு பல்கலைக்கழகம், பிரின்ஸ்டன் பல்கலைக் கழகங்கள் ஆகியன இடம்பிடித்துள்ளன.

கியூ எஸ் வேர்ல்ட் பல்கலைக்கழகத் தரப் பட்டியல் வரிசையில் முதலாவதாக லண்டன் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம், இரண்டாவது ஹார்வர்டு (அமெரிக்கா), மூன்றாவது யேல் பல்கலைக்கழகம் (அமெரிக்கா) நான்காவது லண்டன் யூ.எல்.சி. பல்கலைக்கழகம், ஐந்தாவது அமெரிக்காவின் மசாசாட்ஸ் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெக்னாலஜியும் இடம்பிடித்துள்ளன.

ஷாங்காய் ஜியோ டாங்க் பல்கலைக்கழகம் வெளியிட்ட பட்டியலில் முதலாவது இடம்பிடித்தது அமெரிக்கா ஹார்வர்டு பல்கலைக்கழகம், இரண்டாவது யூனிவர்சிட்டி ஆஃப் கலிபோர்னியா (பெர்கேலி), மூன்றாவது ஸ்டேன்போர்டு (அமெரிக்கா), நான்காவது மசாசாட்ஸ் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெக்னாலஜி (அமெரிக்கா), ஐந்தாவது யூனிவர்சிட்டி ஆஃப் கேம்பிரிட்ஜ் (லண்டன்).

கொள்வதை, பேசுவதை, படிப்பதை, எழுது வதை.... பரிசோதனை செய்யும் தேர்வு இது.

**ஜி-ஆர்.இ.தேர்வு:** இதில் இரண்டுவித மான தேர்வுத் தாள்கள் இருக்கும். ஒன்று பொதுத்தேர்வு; முழுக்க முழுக்க இது கம்ப் யூட்டர் தேர்வு. இதில் மாணவர்களின் தனித் திறமைகள், வெர்பல், குஜாண்டிடேட்டிவ்,



அனாலிட்டிக்கல், எழுத்துத் திறமை... ஆகியவைக் கணிக்கப்படும். மற்றொன்று மாணவர் தேர்ந்தெடுக்கும் சப்ஜெக்ட் தொடர்பானது. அதாவது கலை, அறிவியல், பொறியியல் சார்ந்த படிப்புகளைப் படிப்பதற்கு விண்ணப்பித்திருந்தால் அவை குறித்த கேள்விகள் அதில் இடம்பெறும். இந்த இரண்டு தேர்வில் மட்டும் தேர்ச்சி பெற்றிருந்தால் போதுமா? கேள்வித்தாள் எப்படி இருக்கும். எவ்வளவு மதிப்பெண்கள் எடுத்தால் தேர்ச்சிபெற முடியும். எந்தத் தேர்வு எந்த மாதத்தில் நடத்தப்படுகிறது. வேறு என்ன சான்றிதழ்கள் இணைத்து அனுப்ப வேண்டும்? இவற்றையும் தெரிந்து வைத் திருப்பது ரொம்ப முக்கியம்.

டோஃபல் குறித்த தகவல் அறிய:http://www.ets.org/toefl/

ஜி-ஆர்.இ. தேர்வு குறித்த தகவல் அறிய: http://www.greguide.com/

## லண்டனில் படிக்கணுமா?

படிக்க வேண்டிய பல்கலைக்கழகத்தை உறுதி செய்துகொண்டு, படிப்புக்கான சான்றிதழைப் படித்த கல்வி நிலையத்தின் சான்றிதழோடு, ஆங்கிலப் புலமைக்கான ஐ.இ.எல்.டி.எஸ். தேர்வு அல்லது டோஃபல் அல்லது கேம்பிரிட்ஜ் நடத்தும் ஆங்கில மொழித் தேர்வில் தேர்ச்சி சான்றிதழையும் விண்ணப்பத்தோடு இணைத்து அனுப்ப வேண்டும். அத் துடன் ஜி.ஆர்.இ. அல்லது ஜிமேட் தேர் வில் தேர்ச்சி பெற்றிருக்கவேண்டும்.

மேற்கண்ட நுழைவுத் தேர்வுக்கான புத்தகங்களும், வழிகாட்டி இதழ்களும் பெரிய புத்தகக் கடையில் கிடைக்கின்றன. பயிற்சி வகுப்புகள் சென்னை, மதுரை, திருச்சி, கோவை போன்ற பெரிய நகரங்களில் நடைபெறுகின்றன. பயிற்சிக் கட்டணம் இடத்துக்கு இடம் மாறுபடும்.

**- சத்யன்**

# கங்க்ராட்ஸ் கலைஞர் காப்பீடு!

* ஆறுமுகம்

"இன்னைக்கி எதையும் பார்த்துத் தெளிவா படிக்கிறேன். நல்லா எழுதுறேன். இதுக்கெல்லாம் கலைஞர் காப்பீட்டுத் திட்டம்தாங்க காரணம்!" எனும் ஆறுமுகம், புதுக்கோட்டை மாவட்டம், உலங்காத்தான் பட்டி கிராமத்துப் பையன். கிள்ளுக் கோட்டை, அரசுப் பள்ளியில் ப்ளஸ் ஒன் மாணவன்.

"நான் பொறந்த எட்டு மாசத்துலயே அம்மா இறந்துட்டாங்க. எனக்கு ரெண்டு அக்கா. அப்பா கூலித் தொழிலாளி. அக்கா ரெண்டையும் எப்படியோ கட்டிக் குடுத்துட்டார். நானும் என் அப்பாவும்தான். எனக்குப் பிறவியிலேயே இடது கண் பார்வை இல்லை. வலது கண் சுமாராகத்தான் தெரிஞ்சது. ஸ்கூல் போயிட்டு இருந்த எனக்கு, வலது கண்ணில் லேசா ஏதோ திரை கட்டித் தொங்க விட்டாப்பல ஆயிடிச்சு. அரை குறையா தெரிஞ்சிகிட்டிருந்த குறைப்பார்வையும், வழிச்சுப் போட்டாப்பல எதுவுமே தெரியாமப் போயிடிச்சு. அப்போது நான் பத்தாங்கிளாஸ் படிச்சிட்டு இருந்தேன்.



முழுசாவே பார்வை தெரியாமப் போகவும், ஸ்கூல் போகலை. அந்தச் சமயத்துல கலைஞர் காப்பீட்டுத் திட்டம் கேள்விப்பட்டு, திருச்சிக்கு வந்தேன். இலவசமா எனக்கு கண் ஆபரேசன் பண்ணினாங்க. ஒரு வருசம் ஆவுது. எனக்குப் பார்வை நல்லா தெரியுது. ப்ளஸ் ஒன் படிச்சுகிட்டிருக்கேன்!" என்கிறான் ஆறுமுகம்.


டாக்டர் ஜி.குமாரராஜ்




"ஆறுமுகத்துக்கு கண்ணில் விழித்திரை பிளவு (Retinal Detachment) ஏற்பட்டிருந்தது. இதற்கான அறுவை சிகிச்சைக்குக் குறைந்தபட்சம் ஐம்பதாயிரம் ரூபாய் மருத்துவச் செலவாகும். கலைஞர் காப்பீட்டுத் திட்டத்தின் கீழ், ஸ்டார் ஹெல்த் காப்பீட்டு நிறுவனம் குறிப்பிட்ட நபரின் மருத்துவக் கட்டணத்தைச் செலுத்தியது. தமிழ் நாட்டிலேயே கண் மருத்துவப் பிரிவில், கலைஞர் காப்பீட்டுத் திட்டம் வாயிலாகக் கண்ணொளி பெற்ற முதல் பயனாளி அந்தப் பையன்!" எனக் குறிப்பிடுகிறார் திருச்சி டாக்டர் ஏ. கோவிந்தராஜன் கண் மருத்துவமனையின் இயக்குநரும், அறுவை சிகிச்சை நிபுணருமான டாக்டர் ஜி.குமாரராஜ்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

சென்னைக்கு ஒரு ராசி உண்டு. சர்வ தேசப் போட்டி என்று எது நடந்தாலும் அது விறுவிறுப்பான போட்டியாக அமைந்து விடும். சென்ற வாரம் சென்னை நுங்கம்பாக்கம் மைதானத்தில் நடந்த உலகத் தகுதிச் சுற்று ஆட்டத்தில் பிரேஸிலை இந்தியா தோற்கடித்தது எந்த ஒரு ஹாலிவுட் ஆக்ஷன் படத்துக்கும் ஈடானதாகும். இதனால் உலக டென்னிஸ் வரைபடத்தில் சென்னைக்கு மிக முக்கிய இடமும் கிடைத்துவிட்டது.

சென்ற வருடம் ஆஸ்திரேலியாவுடனான டேவிஸ் கோப்பை போட்டி சென்னையில் நடந்திருக்க வேண்டும். ஆனால் பாதுகாப்பு காரணங்களைச் சுட்டிக்காட்டி போட்டியிலிருந்து விலகி விட்டது ஆஸ்திரேலியா. இதனால் இந்த முறை பிரேஸிலுடனான தகுதிச் சுற்றுப் போட்டி சென்னையில் நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது. வீரர்களும் சென்னைக்குத்தான் ஆதரவளித்தார்கள். இப்போது லியாண்டர், மகேஷ் பூபதி இருவரும் ஒற்றையர் ஆட்டங்களிலும் கவனம் செலுத்துவதில்லை என்பதால் முதல் நாள் நடந்த ஒற்றையர் ஆட்டத்தில் புதிய தலைமுறை வீரர்களான ரோஹன் பொபன்னாவும் சோம் தேவ் வர்மனும் களத்தில் இறங்கினார்கள்.

சென்னையில் எந்த ஒரு சர்வ தேசப் போட்டி நடந்தாலும் ரசிகர்கள் வந்து குவிந்து விடுவார்கள். அதுவும் டென்னிஸ் என்றால் ஊர் திருவிழாபோல நுங்கம்பாக்கம் மைதானம் ஆட்டமும் பாட்டமும் கொண்டாட்டமுமாக நிரம்பி வழியும். ஆனால் முதல்நாளில் எதுவுமே சாதகமாக அமையவில்லை. இரண்டு ஒற்றையர் ஆட்டங்களிலும் தோற்றுப் போனது இந்திய அணி. ரசிகர்களின் உற்சாகம் குறையவில்லை. அடுத்தநாள், லியாண்டரும் பூபதியும் ஆடும் ஆட்டத்துக்கு மைதானத்தை நிரப்பினார்கள். ஆரம்பகாலங்களில் லியாண்டர்-பூபதி இருவருக்கும் சென்னைதான் பெரிய திருப்புமுனையைக் கொடுத்தது. இங்கு ஒன்றாக ஆட ஆரம்பித்துதான் இருவரும் உலக அரங்கில் பெரிய இரட்டையர் வீரர்களானார்கள். இப்போது இரண்டு பேரும் பிரிந்து வெவ்வேறு ஜோடியைத் தேடிக்கொண்டாலும் டேவிஸ் கோப்பை போன்ற தேசியத்தை முன்னிறுத்தும் போட்டிகளில் மட்டும் ஒன்று சேர்ந்து விடுகிறார்கள்.

சென்னையில் இவர்களுக்கு ஈடு கொடுக்க முடியாமல் பிரேஸில் வீரர்கள் திணறினார்கள். இருவரும் 'நண்பேண்டா' என்கிற ரீதியில் ஒருவருக்கொருவர் அனுசரித்து ஆடியதைப் பார்த்து, நிஜமாகவே இருவருக்கும் பிணக்கு ஏதும் உண்டா என்கிற சந்தேகம் கூட வந்துவிட்டது. 1-2



# சென்னையை அசத்திய டென்னிஸ்!

என்கிற கணக்கில் மூன்றாவது நாள் தொடங்கியது. அன்று, சென்னையில் வெயில் கொளுத்தியது. முதல் ஆட்டத்தில் சோம்தேவ் வர்மன் உலகின் 27வது நிலையில் இருக்கும் பெலுச்சியைச் சந்தித்தார். மண்டையைப் பிளக்கிற வெயிலில் தொடர்ந்து ஆடமுடியாமல் தவித்த பெலுச்சி பாதி ஆட்டத்தில் விலகினார். 0-2 விருந்து 2-2 என சமநிலைக்கு வந்தது ஆட்டம். ரசிகர்கள் ஒருவரும் இருக்கையை விட்டு நகரவில்லை. இதுவரை 0-2 என்கிற நிலையில் இருந்து இந்திய அணி டேவிஸ் கோப்பை போட்டியை வென்றதே கிடையாது என்பதால் இந்தியாவின் அதிரடி வெற்றிக்காக எதிர்பார்த்துக் கிடந்தார்கள். தரவரிசைப் பட்டியலில் பொபன்னாவுடன் மோதிய மெல்லோ, பொபன்னாவைவிட 400 ரேங்குகள் முன்னணியில் இருந்தார். ஆனாலும் பொபன்னாவின் ஆட்டத்தின் முன்னால் தரவரிசைவித்தியாசம் எடுபடவேயில்லை. அன்றைய தினம் பொபன்னாவுக்குரியதாக இருந்தது.

'இதுவரை நான் பார்க்காத வெற்றி' என்று புளகாங்கிதம் அடைகிறார் லியாண்டர் பெயஸ். இனிமேல் இந்திய டென்னிஸ் லியாண்டர் பெயஸ், பூபதியை மட்டும் நம்பியிருக்கவேண்டியதில்லை என்கிற அளவுக்கு அடுத்தத் தலைமுறை வீரர்கள் ஜொலிக்கஆரம்பித்துவிட்டார்கள். ஆரோக்கியமான வளர்ச்சி இது. இந்திய





ச.ந.கண்ணன்

அணியில் நம்பமுடியாத வெற்றிக்கு என்ன காரணம்? பிரேஸில் அணி கேப்டனின் விளக்கம் முக்கியமானது: 'இந்திய அணியின் வெற்றி எதிர்பார்த்ததுதான். காரணம் இந்திய டென்னிஸ் வீரர்கள் அனைவரும் மிகவும் ஒற்றுமையாக இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் அடுத்தவருடைய வெற்றியிலும் தோல்வியிலும் பங்கேற்றுக்கொள்கிறார்கள்'. ★



கல்வெட்டுகள்

# நல்லதா... கெட்டதா?

சுமார் ஒரு வருஷக் காலத்துக்குப் பிறகு சென்ற வாரத்தில் மேனாட்டு மாத சஞ்சிகை யொன்றை நான் படித்தேன். அதில் மொத்தம் பத்துச் சிறுகதைகள் வெளியாகி இருக்கின்றன. அவற்றுள் எட்டுக் கதைகள் காதலை அடிப்படையாகக் கொண்டவை. அவைகளில் சில கதைகளின் சாராம்சத்தைக் கீழே தருகிறேன்:

● ஐம்பது வயதான மனிதன் ஒருவன் வாலிபனைப் போல் குதூகலமுள்ளவனாயிருக்கிறான்; ஓர் இளம்பெண்ணுக்கும் அவனுக்கும் இடையில் நேசம் உண்டாகிறது; அம்மனிதனுடைய சொந்த மனைவி இதை அறிந்தாள்; அவனுக்குச் சில சமயம் காசநோய் வருவதுண்டு; சில அபத்தியமான காரியங்களைச் செய்து அந்தப் பெண்ணின் முன்னிலையில் தன் புருஷனுக்குக் காசம் வருமாறு செய்கிறாள்; அப்போது அவன் ஒரு நோயாளிக் கிழவன் என்பதை அவ்விளம் பெண் உணருகிறாள்; அத்துடன் அவர்கள் காதல் முடிகிறது.

● மனைவியை இழந்த ஒரு கணவன் தனது குழந்தையைச் சிகிச்சைக்காக ஆஸ்பத்திரியில் விடுகிறான். அக்குழந்தைக்குச் சிகிச்சை செய்த 'நர்ஸி'ன் மேல் அவன் காதல் கொண்டு முடிவில் அவளைக் கல்யாணம் செய்து கொள்கிறான்.

● ஒரு ஹோட்டல்காரனுடைய வளர்ப்புப் பெண்ணை டம்பாச்சாரி ஒருவன் இச்சிக்கிறான். அவளை அடைவதற்காக அந்த ஹோட்டல்காரன் மீது பொய்யான கொலைக்குற்றம் சாட்டுகிறான். பெண் தம் தந்தையைக் காப்பாற்றுவதற்காக அவனுக்கு இணங்கச் சம்மதிக்கிறாள். கடைசி நேரத்தில் உண்மைக் குற்றவாளி வெளிப்பட்டு டம்பாச்சாரிக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது.

● ஷாங்காயில் அமெரிக்கத் தூதர் நடத்திய விருந்துக்குப் பிரிட்டிஷ் தூதரின் காரியதரிசி கழுத்தில் கருப்புச் சுருக்குடன் போய் விடுகிறான். அதன் பலனாகப் பெரிய தகராறு ஏற்பட்டு விடுகிறது. கடைசியில் அவனுடைய காதலியான அமெரிக்கத் தூதரின் பெண் சிபாரிசினால் சமரசம் ஏற் படுகிறது.

● இவ்வளவு கதைகளும் மேனாட்டாரின் சமூக வாழ்க்கைக்கு முற்றும் பொருத்தமாகக் காணப் படுகின்றன. இதே விதமாக ஆங்கில பாஷையில் மாதந்தோறும் ஆயிரக்கணக்கான கதைகளும் நாவல்களும் எழுதப்படுகின்றன. அவற்றில் மிகப் பெரும் பாலானவை காதல் சம்பவங்களே.

தமிழ்நாட்டில் நல்ல கதைகள் எழுதப்படவில்லையென்றால் எங்கிருந்து எழுதுவது? வரதட்சணையின் கொடுமை, பால்ய விதவையின் துயரங்கள் - இவற்றைப் பற்றியே திரும்பத் திரும்ப நமது நாட்டில் கதைகளும், நாவல்களும் எழுதப்படுகின்றனவென்றால் அதற்கு யார் என்ன செய்யலாம்? நமது சமூக வாழ்க்கை காதல் கதைகளும், நாவல்களும் எழுதுவதற்குப் பொருத்தமானதாய் இல்லையென்பது உண்மை. (இது நல்லதா, கெடுதலா என்பது வேறு விஷயம்!)

**அமரர் கல்கி**

-'படித்தேன்... ரசித்தேன்...' புத்தகத்திலிருந்து.

## முக்திநாத் யாத்திரைகள்

சித்ரகூடம் - அலகாபாத் -
அயோத்யா-நைமிசாரண்யம்-போக்ரா -
முக்திநாத் - காத்மாண்டு - வாரனாசி.
புறப்படும் தேதிகள்:
20.10.2010, 8.11.2010
பயணத்தொகை:ரூ.19,500/- + ரயில் டிக்கெட்

## முக்திநாத் மட்டும்

விமானம் மூலம்:
29.10.2010, 13.11.2010
ரயில் மூலம்:22.10.2010, 10.11.2010.
பயணத்தொகை: 14,000/- + ரயில் / விமான டிக்கெட்

## இலங்கை சுற்றுலா

ரூ.13,000/- மட்டுமே. 4 நாட்கள்.
புறப்படும் தேதிகள்:
15.10.2010, 22.10.2010, 29.10.2010

## பஞ்ச துவாரகை யாத்திரை

புறப்படும் தேதிகள் : 18.10.2010, 8.11.2010.
10 நாட்கள். பயணத்தொகை: ரூ.8500/-
இத்துடன் ராஜஸ்தான் சுற்றுலா. ரூ.16,900/-
எமது நவம்பர் மாத யாத்திரையில்
சேலையூரில் ஸ்ரீமான் லக்ஷ்மிநரசிம்மன்
உபன்யாசம் செய்ய இருக்கிறார்கள்.

## அந்தமான் சுற்றுலா

ரூ.7,500/- விமான டிக்கெட்.
புறப்படும் தேதி: 22.10.2010

## ராஜஸ்தான் சுற்றுலா மட்டும்

11 நாட்கள், ரூ.9,900/-

## ஸ்ரீ டிராவல்ஸ்

194/A, அண்ணாசாலை, ஆயிரம் விளக்கு, சென்னை - 6
போன்:04465345081 / 082 -2851 6799
Email:sritrave@gmail.com Website:www.sreetravels.net

---

# நவராத்திரி அன்பளிப்பு பொருட்கள்

**34 வருட பாரம்பரியம் மிக்க**

மயிலாப்பூர்

# விஜயா ஸ்டோர்ஸ்

பக்தி மணம் கமழும் ஒரு பாரம்பரியக் கடை.





பூஜைக்கு தேவையான மஞ்சள், குங்குமம், சீப்பு,
கண்ணாடி, சுவாமி அலங்கார பொருட்கள், அம்மன்
பாவாடை, மரபாச்சி பொம்மை, அலங்கார மாலைகள்,
தோரணங்கள், காப்பர் கண் மெட்டல், பிளாஸ்டிக்,
பித்தளை, ஒயிட்மெட்டல், செம்பு, ஹாண்டி கிராப்ட்,
அன்பளிப்பு பொருட்கள் மற்றும் பரத நாட்டியத்திற்கு
தேவையான அனைத்து பொருட்களும் கிடைக்கும்.






# VIJAYA STORES

42, (Opp. Kapaleeswarar Temple Office), 72, (Near Indian Bank),
North Mada Street, Mylapore, Chennai - 600 004.
**Ph: 2464 2500, 2495 7555, Res: 2464 3250**






நீ வரும் வரை
உன்னைத் தேடுகிறேன்...
நீ வந்த பிறகு
என்னைத் தேடுகிறேன்!

-உமா ஷக்தி

**உ**தயகுமார் வந்ததும் அகிலாவின் பக்கத்தில் அமர்ந்திருந்த புருஷோத் எழுந்து ''தலைவா இங்க உக்காரு'' என்று உதயகுமாரிடமும், அகிலாவுக்கு மட்டும் கேட்கும்படியாக ''தலைவிக்குப் பக்கத்தில்'' என்றும் சொல்லி ஆனந்த் அருகே போய் அமர்ந்தான்.

நாற்காலியில் அவன் தன்னைப் பொருத்திக்கொள்ளும் முன்பாகவே அவன் கைப்பேசி 'குறுஞ்செய்தி' எனச் சிணுங்கியது. பார்த்தான்.

''தேங்க்ஸ்.''

அகிலாவின் முகத்தில் ஓர் கனவு டிரெய்லர் ஓடிக்கொண்டிருந்தது.

'ட்ரீட்?' கேட்டு எஸ்.எம்.எஸ் எழுதினான்.

மீண்டும் சிணுங்கல். 'டன்.'

உதயகுமார் ஒரு முக்கிய செய்தியை அறிவிக்கப்போகும் பிரஸ்தாபத்தோடு தொண்டையைச் செரும...

காதல் + கலாட்டா + கலக்கல் தொடர்கதை

# கேம்பஸ்

''ரிக்கார்ட் பண்ணிக்கடி. ரிங்டோனா வெச்சுப்ப,'' நிஷா அகிலாவிடம் கிசுகிசுத்தாள்.

''நாளைக்கு எலெக்ஷன். நாம ஜெயிக்கப்போறதைத் தடுக்க சதீஷ் ஒரு புது ப்ளான் பண்ணியிருக்கான்.''

உதயகுமாரின் வசீகரக் குரல் நிலைமையின் விபரீதத்தை உணர்த்தும் தொனியோடு ஒலித்தது.

''சதீஷ் என்ன பண்ணப் போறான்?''

''நம்ம காலேஜ்ல மொத்த ஸ்டுடண்ட்ஸ் ரெண்டாயிரத்து எழுநூறு.''



வே.எழிலரசு

''ஆமாம்.''

''அதுல கேர்ள்ஸ் மட்டும் தொள்ளாயிரத்துத் தொண்ணூத்து எட்டு.''

அகிலாவும் நிஷாவும் ஆமோதிப்பது போல் தலையசைத்தார்கள்.

''கேர்ள்ஸ்ல முன்னூத்து நாப்பது பேரு ஹாஸ்டல்லருந்து வர்றாங்க.''

எதற்கு இந்தப் புள்ளிவிவரம்? தேர்தலுக்கான திட்டமிடல்கள் தொடங்கும் போதே, இவற்றை அலசிவிட்டோமே என்று எண்ணமிட்டான் ஆனந்த். ஆனால், உதய்குமாரின் முகத்தில் தெரிந்த தீவிரம் அவனைக் கூர்மையாகக் கவனிக்கச் சொன்னது.

''டேஸ்காலர் கேர்ள்ஸ்க்கெல்லாம் வீட்டுக்குப் ஃபோன் போட்டு நாளைக்கு உங்க பொண்ணை காலேஜுக்கு அனுப்பாதீங்க, காலேஜ்ல

கலாட்டா நடக்கப் போவுதுன்னு சொல்லப் போறாங்க.''

''ஈஸ் இட்? மை காட்!'' என்று ஏறக்குறைய அலறிய நிஷா அடுத்து உதயகுமார் சொன்னதைக் கேட்டு, ''இது சாத்தியமா?'' என்று கேட்டாள்.

''நாளைக்குக் காலைல உங்க ஹாஸ்டல் வாசல்ல வரிசையா பஸ்ஸுகளைக் கொண்டு வந்து நிறுத்தி காலேஜுக்கு ஏத்திட்டுப் போறன்னு சொல்லி, உங்களை ஏதோ பீச் ரிசாட்ல விடப்போறானாம். எலெக்ஷன் முடிஞ்சப்பறம்தான் நீங்க ரிடர்ன் பேக் டு சென்னை.''

''தலைவா! அவ்ளோ பஸ்ஸுக்கு அவன் எங்க போவான்?''

''சதீஷ் அப்பாவுக்கு உப தொழில்ல ஒண்ணு டிராவல்ஸ்.''

நிஷா, ''ஏண்டி அகில் இது உனக்கு ஷாக்கிங்கா இல்ல?''

''இது மாதிரி சீரியஸான மேட்டரைக் கூட பதற்றமில்லாம சொல்ற உதய் ரியலி கிரேட்ரி.''

''ஏய்! வசு. என்னடி இவ இப்படி பிடில் வாசிக்கிறா?''

''உதய்! நாம இதை எப்படிக் கவுன்ட்டர் பண்ணப் போறம்?''

''நாம ஒண்ணும் செய்ய வேண்டாம். இது கேர்ள்ஸ் மேட்டரு. அதனால அகிலாவே இதை ஹேண்டில் பண்ணுவாங்க.''

அகிலாவுக்குள் ஒரு சிம்பொனியின் முதல் ஓசைக்கூறு கேட்டது.

''என்ன அகிலா? நீங்களே பாத்துப்பீங்க இல்ல?''

''நான் உங்களுக்காக எதை வேணும்னாலும் பண்ணுவேன்.''

'களத்தில் படை நடத்தும் பொறுப்பேற்ற ஓர் வீரனுக்குரிய பெருமிதத்தோடு நெஞ்சு நிமிர்ந்து' அகிலா சொல்ல, கொஞ்சமாகத் தோற்றுப்போன துப்பட்டா ஏற்படுத்திய எதிர்வினையில், ஓரத்தில் அமர்ந்திருந்த புருஷோத் ஏக்கப் பெருமூச்சை வெளிப்படுத்தினான்.

அகிலாவைப் பார்ப்பதில் திடீரென ஏற்பட்ட சங்கடத்தில் உதயகுமார் புத்தக அடுக்குகளைப் பார்த்தான்.

நிஷா அகிலாவின் தோளை அழுத்தி 'கூல் பேபி கூல்' என்றாள்.

சமன்பெற்று, ''சொல்லுங்க அகிலா என்ன பண்ணலாம்,'' எனக்கேட்ட உதயகுமாரிடம், ''கேர்ள்ஸ் எல்லோரையும் நாளைக்குக் காலேஜுக்கு வர வெக்க வேண்டியது என் பொறுப்பு. சரி... சதீஷ் இப்படியெல்லாம் ப்ளான் பண்றாங்கன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்?''

சதீஷ் தம் இடுப்பில் பெல்டோடு இணைந்திருந்த கைப்பேசியை எடுத்து அகிலாவின் முன்னால் வைத்தான். அதன் மீது மெல்ல ஒரு தொடல். தன்னுள் பதிவு செய்யப்பட்

நம் நாட்டு பணத்தில் படித்து, சலுகைகளின் பலன்களை அனுபவிக்கும் இளைஞர்கள், அந்தக் கல்வியறிவை இங்கே பயன்படுத்த மறுக்கிறார்கள். படித்து முடித்ததும் அமெரிக்கா சென்று தங்கள் திறமைகளை செய்யத் துடிக்கிறார்கள். கவலைதரும் இந்த விஷயத்தை சுவாரஸ்யமான திரைக்கதையில் சொல்லும் படம்தான் 'சொல்லித்தரவா' என்கிறார் இயக்குநர் ஆக சிவராமன். ''அரசியல்வாதி ஆக நினைக்கும் கதாநாயகனும், வெளிநாடு மோகத்தில் திரியும் கதாநாயகியும் ஒரு புள்ளியில் சந்திக்கும்போது காதல் வரவில்லை. மோதல்தான் வருகிறது. ஆனாலும் அவர்களை ஒன்று இணைப்பதுதான் படத்தின் மையம்,'' என்கிறார் சிவராமன்.



டிருந்த உரையாடலை அந்தக் கைப்பேசி ஒலிபரப்பியது.

''யார் ஃபோனை ரிக்கார்ட் பண்ணிங்க?''

''கதிர்.''

''கதிர், சதிஷோட ஆளாச்சே!''

**''ஏ**ய் கதிரு தண்ணி லாரி வர்ற நாளுடா... ரெண்டு கொடம் புடிச்சி குடுத்துப்போடா.''

''போம்மா! எனக்குக் காலேஜுக்கு டைம் ஆயிடிச்சி.''

''இன்னும் ரெண்டு அவர் கீதுடா.''

''உம்... இன்னிக்கு ஸ்பெஷல் கிளாஸ்...''

''ஏய், பாத்ரூம்ல மலரு குளிக்கறாடா... மூணாவது போர்ஷன்ல புச்சா வந்து கீறாங்களே டீச்சரம்மா. அவுங்க சோப்பு டப்பா வெச்சு ரிசர்வ் பண்ணிட்டுப் போயிட்டாங்க. உன் டர்ன் வர்றதுக்குள்ள தண்ணிப் புடிச்கட்டு வந்துட்ரா என் ராசா இல்ல?''

கதிர், வீட்டுக்கு வெளியே எட்டிப் பார்த்தான். நான்கு குடித்தனங்களுக்கும் பொதுவான ஒற்றைக் குளியலறையின் மூடப்பட்ட கதவின் மேல் புடைவையும், உள்ளாடைகளும் தொங்கின. பக்கத்தில் இருந்த கழிப்பறை காலியாக இருந்தது. பக்கெட்டோடு போய் போர் பம்ப்பில் அடித்து நிரப்பினான். சோப்பு டப்பா வோடு கழிப்பறைக்குள் சென்றான்.

'புள்ளைக்கி மெய்யாலுமே பெசல் க்ளாஸ்தான் போலகிது... அதான் பாவம் கக்கூஸ்ல போய் குளிக்குது' பிளாஸ்டிக் குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டே தனக்குள் பேசிக்கொண்டே தெருவுக்கு விரைந்த கதிரின் அம்மா, தெருவில் நின்று ஹாரன் அடித்த நவீனைப் பார்த்து, உட் பக்கம் திரும்பி, ''டேய் கதிரு, கதிரு'' என்று கூவினாள்.

கதிர் ஓடி வந்து பைக்கில் அமர்ந்து சட்டை பட்டன்களை ஓடும்போது போட் டுக்கொண்டான்.

சதீஷின் வீட்டு முன்னால் நவீன் பைக்கை நிறுத்தி ஹாரன் அடித்தான்.

'நம்ம வீட்டைவிட இந்த கேட் ரொம்ப பெரிசா இருக்கு' என்று எண்ணமிட்ட கதி ருக்கு, அந்த வீட்டின் வெளியே நிறுத்தப் பட்டிருந்த மாநகரக் குடிநீர் வாரிய லாரி ஆச்சர்யத்தை ஏற்படுத்தியது.

லாரியிலிருந்து தடிமனான குழாய் உயரமான மதில் சுவரைக் கடந்து உள்ளே நீண்டிருந்தது.

'அட, இவங்களுக்குமா தண்ணிப்பஞ் சம்?' என்று நினைத்துக்கொண்டே உள்ளே போனவனின் கண்களில் அந்தக் காட்சி ஓங்கி அறைந்தது.

உள்ளே இருந்த நவீன நீச்சல் குளத்தில் லாரியின் பெருங்குழாய் தண்ணீர் கொட் டிக் கொண்டிருந்தது.

அம்மாவின் கெஞ்சல் முகம் நினை வுக்கு வந்தது.

நீச்சல் குளத்தின் பக்கத்திலிருந்த ஸ்டெப்பி புல்வெளியில் சதீஷ் நாற்காலி போட்டு அமர்ந்திருந்தான்.

''இன்னும் யாரும் வரலையா சதீஷ்?''

''வந்துருவாங்க! நீங்க உக்காருங்க.''

''நவீன் கேர்ள்ஸ் ஓட்டெல்லாம் நமக்



குக் கெடைக்காது போல இருக்கே?''

நீச்சல் குளம் பாதி நிரம்பிவிட்டிருந்தது.

''அதுக்குத்தான் நான் ஒரு ப்ளான் பண்ணியிருக்கேன்.''

பிளாஸ்டிக் குடத்தோடு ''டேய் கதிரு'' என்று அம்மா இறைஞ்சுவதுபோல் இருந்தது. பாக்கெட்டில் கைவிட்டு ப்ரய்லி பாணியில் தன் கொரியன் மொபைலில் உதயகுமாரின் எண்களை அழுத்தினான். முழு உரையாடலும் லைவ் ஆக ரிலே ஆனது.

ஒலிபரப்பு நின்றதும் அகிலா கேட்டாள். ''நாம கதிரை எப்படி நம்பறது?''

''கடைசியில், உங்க வீட்ல காதல் திருமணத்துக்கு எப்படி 'ஒப்புதல்' வாங்கினீங்க?''

''ரேஷன்கார்டு கிடைக்கும்னு சொன்னேன்! ஓ.கே.ன்னுட்டாங்க!''

- அ.சுஹைல் ரஹ்மான்.



அகிலாவின் சந்தேகம் நியாயமானது. புருஷோத், ''அவுங்க நம்மை டைவர்ட் பண்றதுக்கும் இப்படிப் பண்ணலாமே?''

ஆனந்த், ''நாம கதிரை மீட் பண்ணிப் பேசலாமே.''

உதயகுமார், ஆனந்தைப் பார்த்தான். ''நீ சொல்றதுதான் கரெக்ட். கதிர் வீட்டுக்கு ஈவ்னிங் ஏழு மணிக்குமேல் போவோம். அகில் நீ கேர்ள்ஸ் வீட்டுக்கெல்லாம் ஃபோன் பண்ணி, அவுங்களை எப்படியாவது நாளைக்குக் காலேஜுக்கு வரவெச்சுரு.''

சோடியம் வேப்பர் விளக்குகளின் ஒளியில் நகரம் குளித்துக்கொண்டிருந்தாலும், கதிரின் வீடு இருந்த தெரு அரசு எந்திரங்களின் முழுமையான புறக்கணிப்பில் குளித்துக்கொண்டிருந்தது. கதிர் அவர்களை வரவேற்றான். கதிரின் அம்மா வீட்டில் சுமாராகத் தேறிய பாயை உதறிப் போட்டார்.

''கதிரு நீ பேசிக்கின்னு இரு. நான் பாய் கடையில டீ வாங்கிட்டு வந்துடறேன். அங்க தான் சாக்ரீன் போட மாட்டான்.''

அவனின் அம்மா, எவர்சில்வர் சொம்பை எடுத்துக் கொண்டு புறப்பட, ''அம்மா அப்படியே சமூசா'' என்ற உதயகுமாரின் கண்களைப் படிக்க முற்பட்டான் கதிர். அங்கே அரசியல் பாசாங்கு இல்லை. நட்பைக் கொண்டாடும் மனோபாவம் மட்டுமே தெரிந்தது.

''வெங்காயம் வெச்சு லேயர் லேயரா, டைமண்ட் சைசுல செய்யற சமூசான்னா எனக்கு ரொம்பப் புடிக்கும்'' என்று உதயகுமார் சொல்லும்போதே குறுக்கிட்டு... ''இவ்ளநாள் சதீஷுக்குக் கேன்வாஸ் பண்ணிட்டு, இப்ப ஏன் திடீர்னு உதயகுமார் ஜெயிக்கணும்னு நினைக்கிற?'' என்றான் ஆனந்த்.

''சதீஷ் ரொம்ப பணக்காரனா இருக்கான்.''

''நம்ம உதயகுமார், சதீஷைவிட பெரிய பணக்காரன். அது தெரியுமா உனக்கு?''

பாயிலிருந்து நீட்டிக் கொண்டிருந்த கோரையொன்றைப் பிய்த்து கடித்துக் கொண்டே கதிர் சொன்ன பதில் - அவனை மரியாதையோடு நோக்க வைத்தது.

**(தொடரும்)**

# ஆத்மா



**நா**ம் அறிந்த ஆனந்தமெல்லாம் சின்ன ஜீவ நானான அஹங்காரம் என்ற ego-வுடையதே. இது ஆசை பூர்த்தியாலேயே ஆனந்தமடைவது. ஆத்மாவோ ஆசையே இல்லாதது. அந்யமான இன்னொன்றைக் குறித்துத்தானே ஆசை ஏற்பட முடியும்? ஆத்மாவுக்கு அந்ய வஸ்து எதுவும் தெரியாதே! ஆனாலும், எப்படிச் சின்ன ஜீவ நானின் சைதன்யமும் ஆத்ம சைதன்யத்திலிருந்து வந்ததுதானோ அப்படியே இந்த ஆசையும் கூட ஆத்மாவிடம் இதற்குள்ள ஆசையிலிருந்துதான் வந்தது. இப்படிச் சொன்னால் ஆச்சர்யமாக இருக்கும். தனியொன்றாக மாத்திரமே இருப்பது ஆத்மா. அதாவது, ஆத்மா அத்வைத வஸ்து. இது எப்படி த்வைத ரீதியில் மட்டுமே வைக்கக் கூடிய ஆசை என்பதற்கு ஆஸ்பதமாயிருக்க முடியும் என்று ஆச்சரியமாயிருக்கலாம். ஆத்மாவைக் கொஞ்சம்கூட அறிந்து கொள்ளாத ஜீவ மனஸ் அதனிடம் எப்படி ஆசை வைக்க முடியும் என்றும் கேட்கலாம்.

ஆனாலும் உபநிஷத்திலே இப்படித்தான் சொல்லியிருக்கிறது. யாஜ்ஞவல்க்ய மஹரிஷி தம்முடைய பத்னி மைத்ரேயிக்கு உபதேசம் பண்ணுமிடத்தில் இவ்விஷயம் சொல்கிறார். 'ஆசை' என்ற வார்த்தையைச் சொல்லாமல் 'ப்ரியம்' என்று சொல்கிறார். இரண்டும் ஒன்றுக்கொன்று ரொம்ப நெருங்கிய ஸம்பந்தமுள்ளவைதான்; ஒன்றேகூட என்று சொல்லிவிடலாம். நாம் ஆசைப்படுகிற வஸ்துக்களிடமெல்லாம் நமக்கு ப்ரியம் இருக்கிறது. நமக்கு அப்ரியமானவற்றிடம் ஆசையில்லை. அவர் (யாக்ஞவல்க்யர்) என்ன சொல்கிறாரென்றால், ''பெண்டாட்டிக்கு அகமுடையானிடம் ப்ரியம் இருக்கிறதென்றால் அவனை முன்னிட்டே அவள் ப்ரியம் வைக்கிறாள் என்று அர்த்தமில்லை. ஆத்மாவை (தன்னை) முன்னிட்டே அவனிடம் இவள் ப்ரியம் வைக்கிறாள். இப்படியேதான் அவன் இவளிடம் ஆசை வைப்பதும். புத்ரபாசம் என்ற ப்ரியம் அந்தப் பிள்ளைகளையே முன்னிட்டு அல்ல, ஆத்மாவை முன்னிட்டுத்தான். வித்தம் (பொருள்) ப்ரியமாயிருப்பதும் இதே காரணத்துக்காகத்தான்.''

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

**'பசங்க' படத்தில் எழுதிய வசனங்களுக்காக தேசிய விருது கிடைத்திருக்கிறது இயக்குநர் பாண்டிராஜுக்கு. சினிமா நண்பர்களிடமிருந்தும், அவரது சொந்த ஊர் விராச்சிலை உறவுகளிடமிருந்தும் பாராட்டுகள் குவிந்தவண்ணம் இருக்கின்றன. அவரது செல்லிடப் பேசியில்...**

**முதல் படம்; தேசிய விருது... எப்படி உணர்கிறீர்கள்?**

''ஒரு பக்கம் மகிழ்ச்சியாக இருந்தாலும் இன்னொரு பக்கம் சோகமாக இருக்கு. என் அம்மாவுக்குக் கண் பார்வை இருக்கும்போதே, 'பசங்க' படத்தை எடுத்துக் காண்பிக்கணும்னு நினைச்சேன். படம் வர்றதுக்கு முன்னாடியே அம்மா இறந்துட்டாங்க. அப்பாவும் இப்ப உயிரோட இல்லை. இந்த வெற்றியைக் கொண்டாட என்னைப் பெத்தவங்க இல்லாதது கஷ்டமா இருக்கு.

எங்களோடது விவசாயக் குடும்பம். விவசாய வேலைகள் செய்யறப்ப, வேலையின் பளு தெரியாமல் இருக்க, ஊர் விஷயங்களை அழகா திரைக்கதை மாதிரி எங்கம்மா சொல்லுவாங்க. 'யோசனை மஞ்சு வாண்டுதான்' போன்ற 'பசங்க' படத்தில் இடம்பெற்ற நிறைய வசனங்கள் எங்கம்மா அடிக்கடி உச்சரித்த வார்த்தைகள்.

எனவே, வசனத்துக்கான எனக்குக் கிடைத்த விருதை என் தாய்க்குக் காணிக்கையாக்குகிறேன். பன்னிரெண்டாவது மட்டுமே படித்த எனக்கு சினிமாவில் ஏற்பட்ட போராட்டங்களும், வாழ்க்கை தந்த அனுபவங்களும் தான் கல்லூரிப் படிப்புகள்.''

**'பசங்களின்' ரியாக்ஷன் எப்படி இருந்தது?**

''சிறந்த குழந்தை நட்சத்திரங்களுக்கான தேசிய விருதைப் பெற்ற கிஷோரும் ஸ்ரீராமும் தங்களுடைய வேல்யூவையும், இந்த விருதைப் பற்றியும் முழுசா புரிஞ்சுக்கிட்டாங்களான்னு தெரியலை. இவர்களில் ஸ்ரீராம் (ஜீவாவாக நடித்த சிறுவன்) ஹீரோவாவதே இலட்சியம்னு சொல்லியிருக்கான். நம்ம பசங்க வயசுப் பசங்களா வளர்ந்து ஜொலிக்கிற காலம் வர்ற வரைக்கும் வெயிட் பண்ணிப் பார்ப்போம்.''



* வாழ்த்தும் இயக்குநர் சசிக்குமார்...

# "அம்மா தந்த

**அடுத்தடுத்த படங்கள்?**

''சிட்டி பேக்ரவுண்டில் பக்காவா ஒரு யூத் சப்ஜெக்ட் பண்ணலாம்னு ஐடியா இருந்தது. நடுவுல தேசிய விருது கிடைச்சதால, இப்ப இந்த சப்ஜெக்ட்டைச் செய்யணுமான்னு யோசிக்கிறேன். ஒரு டைரக்டருக்கு முதல் படம்ன்றது பத்து வருஷத்து உழைப்பு.

அதனால டைரக்டரோட இரண்டாவது, மூன்றாவது படங்களில்தான் உண்மையான திறமை தெரியும்னு சொல்லுவாங்க.

'பசங்க', 'வம்சம்' இரண்டுமே நான் முதல் பத்து வயது வரை பார்த்து உணர்ந்த பத்திலிருந்து இருபது வயது வரை கிடைத்த அனுபவங்கள். இப்போது கிடைத்துக் கொண்டிருக்கும் வாழ்க்கையில் இருந்து சினிமாவில் சொல்வதற்கு நிறைய விஷயங்கள் இருக்கின்றன. இப்போது யோசித்து வைத்திருக்கும் கதைக்கு 'பசங்க' படத்தில் நடித்த விமல் சரியாக இருப்பார் என எண்ணுகிறேன்.''

தேசிய விருது பூரிப்பு

**சேரன், தங்கர்பச்சான், அமீர் இவர்கள் சொல்லாத யதார்த்த சினிமாவை உங்களால் காட்ட முடியுமா?**

''நான் சேரன், தங்கர்பச்சானிடம் அஸிஸ்டெண்டாக இருந்தாலும், என்னுடைய படைப்பில் அவர்களின் சாயல் இருக்காது. எனது படைப்பு நான் பார்த்து உணர்ந்த பாதிப்பின் பதிவுகளாகத்தான் இருக்கும். இயக்குநர் என்பவன் எந்த மூலக் கூறுகளுக்குள்ளும் சிக்கிவிடக் கூடாது.''

# வசனங்கள்!''

**- 'பசங்க' பாண்டிராஜ்**

**ஹீரோக்களுக்குக் கதை பண்ணுவீங்க?**

''கதைதான் என் படத்துக்கு ஹீரோ. என்னுடைய கதைக்குப் பெரிய ஹீரோ தேவைப்பட்டால் மட்டுமே நான் அவர்களைத் தேடிப் போவேன்.''

- ராகவ் குமார்

# அழகிரி



## எதற்காகப் போனார் யசோதா?

சட்டமன்ற காங்கிரஸ் கட்சியின் துணைத் தலைவராக இருக்கிறார், அவ்வப்போது பல கோஷ்டிகளில் தலைகாட்டும் யசோதா. தலைவர் சுதர்சனம் இறந்தபிறகு தானாக அந்தப் பதவி தமக்கு வந்து சேரும் என்று நினைத்தார் யசோதா. ஆனால் ஜி.கே. வாசனும், முதல்வரும், சட்டமன்ற காங்கிரஸ் கொறடா பீட்டர் அல்போன்ஸை அந்தப் பதவியில் உட்கார வைக்க விரும்புகிறார்கள். சக்திவாய்ந்த தலைவர் பதவி தமக்குக் கிடைக்காமல் போய் விடுமோ என்று ப.சிதம்பரத்தின் கோஷ்டிக்கு அவர் தயவு நாடி தாவி விட்டார். "முதலில் இவர் தொகுதிக்கு அடிக்கடி வரட்டும். இங்கே பலருக்கு அவரது முகமே மறந்து விட்டது. சட்டமன்றக் கட்சித் தலைவர் பதவி கிடைப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். வரும் தேர்தலில் இதே தொகுதி அவருக்கு மீண்டும் கிடைக்க ப.சி. உதவக்கூடும்" என்று கிண்டல் அடிக்கிறார், யசோதா தொகுதியின் ஸ்ரீபெரும்புதூர் நகர காங்கிரஸ் பிரமுகர்.



## ஃபெயிலாகும் அமைச்சர்கள்

தி.மு.க. அமைச்சர்களில் பன்னிரண்டு பேருக்கு இந்த முறை சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட வாய்ப்பு கிடைக்காதென்று கிசுகிசுக்கிறார்கள் அறிவாலய உடன்பிறப்புகள். அவர்களது செயல்பாடுகள் பற்றித் தலைமைக்குச் சிறிதும் திருப்தியில்லையாம். இதில் இரண்டு பெண் அமைச்சர்களும் அடக்கம். இவர்களில் சிலர் அழுது புலம்பி ஏதாவது அதிகார மையத்தின் துணையுடன் மீண்டும் சீட்டு வாங்கினாலும் உள்ளூரில் பெயர் ரொம்ப டேமேஜ் ஆனபடியால் தோல்வி உறுதி! என்கிறார்கள் அவர்கள்.



## முறைக்கும் முத்தரையர்

திருச்சியைச் சுற்றியுள்ள தொகுதிகளில் முத்தரையர்கள் கணிசமாக உள்ளனர். வழக்கமாக தி.மு.க. ஆதரவாளர்களான இவர்கள் இந்த முறை தி.மு.க. மீது கடுப்பில் உள்ளார்களாம். காரணம், உள்ளூரில் சகல அதிகாரத்துடன் வளைய வரும் அமைச்சரின் தம்பிதானாம். அந்தத் தம்பிக்குச் சொந்தமான அரிசி ஆலை ஒன்றில் மர்மமான முறையில்

# பாலிடிக்ஸ்

# பேரைப் போடு!



"தமிழ்நாட்டில் நடக்கும் எல்லா முக்கிய கழக நிகழ்ச்சிகளிலும் அழகிரிக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்று அவசியமில்லை. அதைப் புரிந்துகொள்ளாமல் பத்திரிகைகள் சிண்டு முடிகின்றன" என்கிறார் ஸ்டாலின் ஆதரவு அமைச்சர் ஒருவர். உதாரணமாக "குமரியில் நடந்த முப்பெரும் விழாவில் அழகிரிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை; அழைப்பிதழில் பெயர் இல்லை என்று குழப்பி விடுகிறார்கள். கழக விழாக்களில் புரோட்டோகால்படி துணைச் செயலாளர்கள் பெயர் வரைதான் போடுவோம். கழக நடைமுறை தெரியாமல் கதை அளக்கின்றன பத்திரிகைகள்" என்கிறார். ஆனால் குடும்பக் குடைச்சல் காரணமாக அழகிரி, கனிமொழி பெயர்களை முப்பெரும் விழா பத்திரிகை விளம்பரங்களில் போட்டது தனிக்கதை. கூடவே குஷ்பு பெயரையும் சேர்த்தது சீனியர்களுக்குக் கடும் எரிச்சலையும் கடுப்பையும் உண்டாக்கியிருக்கிறது.



## வேலுக்கு ஸீலு

திருச்சியில் நடந்த தி.மு.க. கூட்டத்தில் உணவு அமைச்சர் எ.வ.வேலு பத்திரிகைகளில் வந்தவற்றையும், காளிமுத்து போன்றோர் பேசியதையும் வைத்து ஜெயலலிதாவைக் கடுமையாகத் தாக்கி, முதல்வர் முன் பேசினார். அந்தப் பேச்சால் கவரப்பட்ட தி.மு.க. பிரமுகர்கள், "அண்ணே.. அந்தம்மாவுக்குப் பதில் கொடுக்க நீங்கதான் சரியான ஆளு," என்று பொதுக் கூட்டம் பேச அழைக்கிறார்களாம். ஆனால் வேலு அதுபோன்று மீண்டும் பேசக்கூடாதென்று முதல்வர் அன்பு கலந்த கண்டிப்புடன் சொல்லி விட்டாராம்.



இறந்து போனார் முத்தரையர் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர். அதைப்பற்றித் தம்பியிடம் நியாயம் கேட்கப்போன அந்த ஜாதியினரின் முக்கியப் பிரமுகரை, மிகவும் இழிவாகப் பேசி மிரட்டி விட்டாராம் அமைச்சரின் தம்பி. இதன் காரணமாக முத்தரையர் இளைஞர்கள் கடும் கோபத்தில் இருக்கிறார்களாம்.

- சஞ்சயன்



பஜார்

## அனுமதி

பிதுர் தானம்
முகர வரும் நாயை
கல் எறிந்து விரட்டியாயிற்று
வேக நடை போட்டு வந்த
கோழியையும்
கம்பு கொண்டு விரட்டியாயிற்று
ஈ, எறும்பு பூச்சிகளையும்
அனுமதிக்காமலாயிற்று
காக்கை உருவில்
வருவான் தகப்பன்
என்ற நம்பிக்கையில்
பிடி சோறு வைத்துப் போகிறான்
காக்கையைத்தவிர
மற்றெதற்கும் அனுமதியில்லை
பசியிருந்தபோதும்!

- ஸ்ரீநிவாஸ் பிரபு

## ரேகை

சட்டையை உதறினாலும்
போகவில்லை
அம்மாவின் ரேகை!

- பொன்.முத்துவேல்

## காத்திருப்பு

வெளிச்சமில்லா அறைக்குள்
தேடிக் கொண்டிருக்கிறோம்
நான் உன்னையும்,
நீ என்னையும்!

கைகள் நீட்டித் தேடுகிறோம்...
தொட்டு விடும் தூரம்தான்
ஆனாலும்,
தொட்டுவிடக் கூடாது
என்ற எண்ணத்தோடு!

மெல்லிய திரையை கனமாக்குகிறோம்,
முகங்களின் விகாரங்களைப்
பார்க்கப் பிடிக்காமல்!

தாமரை இலைத் தண்ணீர்போல்
இணக்கமில்லா உறவு.
விழவா என்று தண்ணீரும்,
விட்டுவிடவா? என்று இலையும்...
ஒரே ஒரு காற்று...
தண்ணீர் அதன் போக்கில்,
இலை...
அடுத்த துளிக்காகக் காத்திருக்கிறது!

- எம்.ஈஸ்வரி

---

யாரோ கல் வீச
எழுந்தன சிற்றலைகள்
மெல்ல அலையத் தொடங்கியது
மீனுக்காக
தவமிருக்கும்
ஒரு கொக்கின் பிம்பம்

கொடிக்கம்பியில் காயும்
அம்மாவின்
சாயம் போன சேலையில்
இன்னும்
வெளுக்காமலிருக்கிறது
குடித்தே
செத்துப்போன
அப்பாவின் மரணம்

வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச்
சீக்கிரமா 'கவிதை கஃபே'ன்னு குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

# கவிதை கஃபே

'கவிதை கஃபே' பகுதியில் இடம்பெறும் கவிதைகளுக்கு சன்மானம் உண்டு.

## சில்லறை வார்த்தைகள்

தெரு ஓவியனின்
வண்ணங்கள் கொண்டு
காதலை வரைகிறேன்
சிதறிக் கிடக்கின்றன
ஓவியத்தின் மீது
உன் சில்லறைப் பார்வைகள்.

- நாணற்காடன்



''சுதந்திரத்துக்காக உன் தாத்தா போராடினாரா...''

''ஆமாம்... ஆனால் கடைசிவரை பாட்டி தரவே இல்லை...''

- எஸ்.மோகன்



''நான் கொடுத்த மாத்திரைல உங்களுக்கு ஏதாவது 'பின்'விளைவு இருக்குதா?''

''இல்ல டாக்டர், 'மூன்'விளைவுதான் இருக்குது. 'வயிறு' வலிக்கற மாதிரி...!''

- வெ.சீதாராமன்

# 'பின்' விளைவா_ முன் விளைவா?



''நேத்து நைட் வாட்ச் கடையில திருடிட்டு இருக்கும்போது மாட்டிக்கிட்டேன்!''

''உனக்கு டைம் சரியில்லைன்னு நினைக்கிறேன்!''

- ப.கோபிபச்சமுத்து



''ஆறு மாசமா கபாலி எங்கய்யா தலைமறைவா இருந்தானாம்!''

''போலீஸ் போகாத இடமாப் பார்த்து ஒளிஞ்சிருந்தானாம்...''

''அப்படியா! எங்க?''

''லைப்ரரியில...''

- அ. யாழினி பார்வதம்



''பையன் டி.வி.யில சீரியல் பண்றான். 'நல்லா வரணும்'னு ஆசீர்வாதம் பண்ணுங்க!''

''மெகாராசனா இரு!''

- நெ.இராமன்



''தொகுதிப் பக்கம் தலையைக் காட்டாம இருந்ததுக்கு நன்றி தெரிவிச்சு பாராட்டு விழாவே நடத்தறாங்களா... ஆச்சரியமா இருக்கே!''

''பின்னே... தொகுதியில இப்போ குற்றங்கள் குறைஞ்சு போச்சாம்ல!''

- போளூர் ஆர். பஞ்சவர்ணம்

மிஸ் வேர்ல்ட் பட்டத்தை வெல்லும் வரை உள்ள ஐஸ்வர்யா ராயின் கதை படமாகிறது. ஐஸ் ரோலில் அசத்தப்போவது மினிஷ்ஷா லம்பா.



பாபா ராம்தேவ், ஆரவல்லி மலைத் தொடரில் ஏராளமான நிலங்களை வாங்கு கிறாராம். இல்லை என்கிறது ராம்தேவ் தரப்பு. ஆம் என்கிறது வனத் துறை.

# நியூஸ் மிக்சர்



சக்தி கபூரின் மகள் ஷ்ரத்தா கபூர்தான் அடுத்த லாக்மே அழகி. ரேகா, ஐஸ்வர்யா ராய், லிசா ரே, பிபாஷா பாசு, யானா குப்தா, கத்ரினா கைஃப் எல்லோரும் லாக்மே மேடையில் வலம் வந்தவர்கள்.

# படமாகும் ஐஸ்வர்யா ரா[ய்] கதை!

பாகிஸ்தான் வெள்ளப் பேரழிவு ஆஞ்சலினா ஜோலி வரை பாதித்து விட்டது. உலகத்தின் கவனத்தைப் பாகிஸ்தான் பக்கம் திருப்ப, ஜோலியின் விசிட் உதவும் என்கிறார்கள்.



''அனைத்து கிரிக்கெட் போட்டிகளில் இருந்தும் விலகுகிறேன்'' என்று வருத்தத்தோடும் வேதனையோடும் ஆண்ட்ரியூ ஃப்ளிண்டாஃப் அறிவித்தார். மூட்டு அறுவை சிகிச்சைகள், அவரை முற்றிலும் வீழ்த்திவிட்டன.



''எல்லா வகையிலும் என்னைத் தயார் செய்து கொண்டு சினிமாவுக்குள் வர ஆசைப்படுகிறேன். வந்தபின், தோல்வி அடைந்துவிடக்கூடாது.'' கோவிந்தாவின் மகள் நர்மதா அஹுஜாவின் பொன்மொழி இது.

- துளசி

கண்ணன் என்ற ஒரு சிறுவர் பத்திரிகை 1950-லிருந்து 1971 வரை வெளிவந்தது. என்னைப் போன்ற அந்தக் காலத்துச் சிறுவர்களுக்கு அப்போதெல்லாம் விளையாட்டை விட்டால் கதைப் புத்தகங்கள், பத்திரிகைகள் படிப்பதுதான் முக்கியமான பொழுதுபோக்கு. அதன் ஆசிரியர் ஆர்.வி.யை நேரில் பார்க்க வேண்டும் என்று மனம் ஆவலில் பரபரக்கும். ஆனாலும் ஏதோ ஒரு தயக்கத்தில் அது வெகு காலம் வரை நிறைவேறாமலேயே இருந்தது. ஒருவழியாக 2008-ம் வருடத்தில் அவரைச் சந்திப்பதற்கு என்றே சென்னை வந்து, அவர் வீட்டில் அவரோடு எடுத்துக் கொண்ட புகைப்படம் இது.

- சின்னஞ்சிறுகோபு,
மயிலாடுதுறை.

# ஆறா ஆல்பம்



ஃபோட்டோவுடன் இடம்பெறும் ஒவ்வொரு அனுபவத்துக்கும் பரிசு ரூ.50/-



என் மூத்த பையன் வெங்கடேஷுக்கு ஆறு மாதம் ஆகும்போது எடுத்த ஃபோட்டோ இது. அப்போது நாங்கள் குஜராத்தில் இருந்தோம். உறவினர்கள் எல்லோரும் தமிழ்நாட்டில் இருந்ததால், குழந்தையை ஃபோட்டோ பிடித்து அனுப்பச் சொன்னார்கள். அவனுக்கு அப்போது உட்காரக்கூடத் தெரியவில்லை. ஃபோட்டோவில் நான் தெரியாதவாறு நின்று அவனைத் தாங்கிப்பிடித்துக் கொண்டேன். ஸ்டுடியோக்காரர் டக்கென்று ஃபோட்டோ எடுத்தார்.

**வாசகர்களே!**

திருமண ஃபோட்டோ மட்டுமல்ல, நீங்கள் பெரிதும் ரசிக்கும், பொக்கிஷமாகப் பாதுகாக்கும் ஃபோட்டோ எதுவாயினும் 10 வரிகள் குறிப்புடன் ஜம்முன்னு எழுதி அனுப்புங்க...



இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு, ஜம்முவிலுள்ள கவர்னர் மாளிகைக்கு ஜனாதிபதி ஆர்.வெங்கட்ராமன் விஜயம் செய்தபோது நாங்கள் எடுத்துக் கொண்ட ஃபோட்டோ இது. என் கணவர், ஈ.என். மூர்த்தி, கவர்னர் ஜக்மோகனுடன் பணியாற்றிவந்த நேரம் அது. காலையில் ஜனாதிபதிக்குத் தேவையான பில்டர் காஃபி போடும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது மறக்க முடியாத அனுபவம்.

- சித்ரா மூர்த்தி, அடையார்.



இப்போது வெங்கடேஷ் மஸ்கட்டில் வேலை பார்க்கிறான். அவனது கலர் ஃபோட்டோக்கள் பல இருந்தாலும் நான் ரசிக்கும் ஃபோட்டோ இதுதான்.

- சி.ஜெயலெட்சுமி, கொரட்டூர்.

திருக்கடையூர் அமிர்தகடேஸ்வரர் சன்னிதியில் எங்கள் குடும்ப உறவினர்கள் நண்பர்கள் புடைசூழ சஷ்டியப்த பூர்த்தி வைபவம்(12.06.2008) இறைவன் அருளால் இனிதே நடந்தேறியது. நானும் என் மனைவியும் (எல்.கஸ்தூரி) மணமேடையில் அமர்ந்து அபிஷேக ஜலகிரிடை முடிந்து, என் மனைவிக்கு மாங்கல்யம் அணிவித்த பிறகு அச்சன்னிதியில் உள்ள அம்பாளின் முன்பு எடுக்கப்பட்ட புகைப்படம் இது.

- வீ.லோகநாதன்,
அம்பத்தூர்.



# புலி மீது 5



'ஏக்நாத் என்று இன்னொரு மகான். அவரது சிந்தனையிலும் விட்டலனே நிறைந்திருந்தான். அவருக்கு ஒரு நாள் ஒரு கனவு வந்தது. அதில் ஞானேஸ்வரர் தோன்றினார். ''நான் அமைதியாக சமாதியில் இருக்கிறேன். ஆனால் என் கழுத்தை விருட்சத்தின் வேர்கள் நெறிக்கின்றன. நீங்கள்தான் இந்த நிலையை மாற்ற வேண்டும்'' என்றார்.

ஞானேஸ்வரரின் சமாதிக்குச் சென்றார் ஏக்நாத். அதை உற்றுப் பார்த்தார். அருகில் இருந்த மரத்தைப் பார்த்தார். சில நொடிகள் கண்களை மூடிக்கொண்டார். அவருக்கு ஞானேஸ்வரர் கூற வந்தது புரிந்தது. மறைமுகமாக உணர்த்தப்பட்ட பொருள் விளங்கியது.

ஞானேஸ்வரர் எழுதிய கீதையின் மராத்தி வடிவத்தில் காலப்போக்கில் வேறு பலரும் எழுதிய பாடல்களும் கலந்துவிட்டன. இதைத்தான் ஞானேஸ்வரர் தம் கனவில் குறிப்பிட்டார் என்பதை உணர்ந்த ஏக்நாத் அவரது நூலை ஆராய்ந்தார். எழுதப்பட்ட நடையைக் கொண்டும் கூறப்பட்ட கருத்துகளின் ஆழத்தைக்கொண்டும் அவரால் மூலத்தை நகல்களிடம் இருந்து பிரிக்க முடிந்தது. இலக்கியத்துக்கும் அவர் புரிந்த சேவை இது.

ஏக்நாத் வாழ்ந்த பைட்டண் நகருக்கும் நாம் செல்லப்போகிறோம் என்று ராமநாதன் கூறிமுடித்தவுடன், ''எருமை வேத பாராயணம் செய்த இடம்தானே'' என்று கேட்டு ஆமோதிப்பையும் பாராட்டுகளையும் வாங்கிக் கொண்டான் ஜருகண்டி.

இன்னும் கூட சற்று அதிக நேரம் ஞானேஸ்வரரின் சமாதிக்கருகே அமர்ந்து தியானம் செய்ய எங்களுக்கு ஆசைதான். ஆனால் அன்றே டேஹு"வுக்கும் செல்வதாகத் திட்டமிட்டிருந்தோம். டேஹு", மகான் துக்காராம் வாழ்ந்த இடம்.

அருண் சரண்யா

# தீராத விளையாட்டு விட்டலன்

பாகம்–2

ஜருகண்டி, "இன்னும் நீங்க கோராகும்பர் கழியாலே மத்தவங்க தலையைத் தட்டிப் பார்த்த கதையையே சொல்லவில்லை" என்றான்.

"டேஹூ" போகும்போது ரெண்டையுமே சொல்லிடறேன்" என்றார் ராமநாதன்.

ஆலயத்தைவிட்டு வெளியே வந்தோம். பிரபல ஆலயங்களைச் சுற்றி என்னவெல்லாம் இருக்குமோ அத்தனையும் ஆலந்தியிலும் இருந்தன. சிறு கடைகள், உணவகங்கள், பயணிகளைப் பின்தொடரும்... யாசகர்கள். ஜருகண்டியை மிகவும் கவர்ந்தது இனிப்பகங்கள்தான். கண்களை மிகவுமே கூசவைக்கும் அளவுக்கு ஒளி வெள்ளத்தில் அமைந்திருந்தன சின்னச் சின்னக் கடைகள். ஜிலேபிகளையும் லட்டுகளையும் மலைபோல் அடுக்கி வைத்திருந்தார்கள். அப்போதுதான் செய்யப்பட்டுக் கொண்டிருந்த அந்த இனிப்புகள் ஜருகண்டியின் சுவை அரும்புகளை ரொம்பவுமே இழுத்திருக்க வேண்டும். "ஒரு நிமிஷம்" என்று எங்களிடம் கூறிவிட்டு அவசர அவசரமாகச் சென்றான். வரும்போது அவன் கையில் ஒரு பெரிய பொட்டலம். உள்ளே சூடான ஜிலேபிகள்.

ஜிலேபிகளை அனைவருக்கும் பகிர்ந்து தர ஜருகண்டி முயற்சித்தபோது ராமநாதன் அதற்குத் தடைபோட்டார். "கொஞ்சம் பொறுத்துக்கோ ஜருகண்டி. பக்கத்திலே ஒரு சுவர் இருக்கு. அதை தரிசித்தபிறகு சாப்பிடலாம்" என்றார்.

ஜருகண்டியின் கவனம் கையிலிருந்த இளம் சூடான ஜிலேபிகளின் மீதே இருந்ததால் ராமநாதனின் வார்த்தைகள் அவன் காதுகளில் சரியாக விழவில்லை போலும். "ஓஹோ, சுவரிலே உட்கார்ந்துகிட்டுச் சாப்பிடலாம்னு சொல்றீங்களா? அப்படியே செய்யலாம்" என்றான்.

"அது நாம உட்காருவதற்கான சுவர் இல்லை. ஞானேஸ்வரரும் அவருடைய உடன்பிறப்புகளும் உட்கார்ந்து வரலாறு படைத்த சுவர்."

அங்கிருந்து ஆறேழு நிமிடங்கள் நடந்தவுடனேயே அந்தச் சுவர் எங்கள் கண்களில் தென்பட்டது. அதைச் சுற்றிலும் மேடை எழுப்பியிருந்தார்கள். சுவரின் மீது உட்காருவதற்கு அகலமாகவே இடம் இருந்தது.

பரவசத்துடன் அந்தச் சுவரைத் தரிசித்தார் ராமநாதன். பிறகு உற்சாகத்துடன் விவரிக்கத் தொடங்கினார்.

## பயணம்!



''கோராகும்பர், ஞானேஸ்வரர், நாம தேவர் அனைவருமே ஒரே காலக்கட்டத்தில் வாழ்ந்தவர்கள். ஞானேஸ்வரரும் நாம தேவரும் இணைந்து பாரதத்தின் பல பகுதிகளுக்குப் பக்தி உலாச் சென்று வந்ததையும், தாங்கள் சென்ற இடங்களில் எல்லாம் பக்தி நெறிகளைப் பரப்பி வந்ததும் ஏற்கெனவே உங்களுக்குத் தெரிந்ததுதான்.''

''கரெக்ட். ஒரு கிணற்றின் அடிவாரத்தில் தண்ணீர் இருக்க, ஞானேஸ்வரர் ஒரு



● நாம தேவர்

பாடலைப் பாடியதும் தண்ணீர் மேலே வந்ததே அந்த அதிசய சம்பவம்கூட அப்போது நடந்ததுதானே?'' என்றான் ஜருகண்டி.

''உண்மைதான். இந்த இடத்தில் சாங்க தேவர் பற்றியும் குறிப்பிட்டு ஆகவேண்டும். காரணம் ஞானேஸ்வரரின் சரிதத்தில் சாங்க தேவருக்கு முக்கிய இடமுண்டு. அந்த இரண்டு பேரின் சரித்திரத்திலும் இந்தச் சுவருக்கும் முக்கிய இடமுண்டு.

சாங்கதேவர் கோதாவரி நதிக்கரையில் இருந்த புன்தம்பா என்கிற சிறிய நகரில் பிறந்தவர். பலவித சித்துவேலைகளை அனாயாசமாகச் செய்தவர். சுடுகாட்டுக்குச் செல்வார். தம் மந்திர சக்தியால் அங்கு வரும் பிணங்களை ஓரிரு நிமிடங்கள் எழுந்திருக்கச் செய்வார். மற்றவர்கள் வாய்பிளந்து நிற்பார்கள். ஆயிரம் வருடத்தைத் தாண்டியும் உயிர் வாழ்ந்த சிறப்பு பெற்றவர் அவர். ஆனால் அவருக்கு நடுவில் எழுந்த கர்வம் அவருக்கு ஒரு பெரும் பாடத்தை அவருக்குப் புகட்டியது.

'பிணத்தையே சிறிது நேரத்துக்கு எனது மந்திர சக்தியால் உயிர்ப்பிக்க முடிகிறது என்றால் அதைவிட ஒரு பெரிய காரியத்தை வேறு எவரால் செய்துவிட முடியும்?' என்கிற இறுமாப்பு அவரிடம் முளைவிட்டது.

அந்தக் காலகட்டத்தில்தான் ஞானேஸ்வரர் வசித்த பகுதியில் இருந்து சிலர் சாங்கதேவர் இருந்த பகுதிக்குப் பக்தி உலாச் சென்றார்கள். அப்படிச் சென்றவர்கள் ஞானேஸ்வரரின் அருமை பெருமைகளை அந்த ஊர்க்காரர்களிடம் தவறாமல் எடுத்துக் கூறினார்கள். முக்கியமாக அவரது அருளால் எருமை ஒன்று வேதபாராயணம் செய்ததைச் சொல்லி மாறிமாறி வியந்தார்கள். செய்தி சாங்கதேவரை எட்டியது.

அவர் மனத்தில் பொறாமை உணர்வு தோன்றியது. ''எருமை ஓர் உயிருள்ள விலங்கு. அதைப் பேசச் செய்வது ஒரு பெரிய விஷயமா? நான் பிணங்களையே சில நொடிகளுக்கு உயிர்ப்பிக்கிறேனே.''

சாங்கதேவரின் எரிச்சலை அதிகமாக்குவதுபோல் வந்து சேர்ந்தது அடுத்த தகவல். ஞானேஸ்வரர் சுடுகாட்டுக்குச் சென்று விட்டலன் குறித்த பாடல்களை மனமுருகிப் பாடுகிறாராம். சுடுகாட்டில் உள்ள பிணங்கள் மட்டுமல்ல; ஏற்கெனவே எரிக்கப்பட்ட பிணங்களும் கூட உருவம் பெற்று சிறிது நேரம் விட்டலனின் பாடல்களை அவருடன்



சேர்ந்து பாடி இன்புறுகின்றனவாம்.

இதைக் கேள்விப்பட்டதும் சாங்கதேவர் கொதித்துப்போனார். தம் புகழ் மங்கி வருவதுபோல அவருக்குப்பட்டது. ஞானேஸ்வரரை விடவும் தான் சித்து வேலைகளில் தலைசிறந்தவர் என்பதை மக்களுக்குப் புரியவைக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அதற்கு ஒரே வழி ஞானேஸ்வரரை நேரடியாகச் சந்தித்து அவரைத் தோல்வி காண வைப்பதுதான் என்றும் முடிவெடுத்தார்.

**"ஞானேஸ்வரர் பாடியதும் வறண்ட கிணற்றிலிருந்து தண்ணீர் மேலே வந்தது!"**

இப்படித் தீர்மானித்த அவர் தமது இடத்தில் இருந்து ஞானேஸ்வரர் அப்போது தங்கியிருந்த ஆலந்தியை நோக்கிப் பயணம் செய்தார். அப்போது வழியில் இருந்த மக்கள் சிதறி ஓடினார்கள். காரணம் அவர் தாங்கிய கோலம்.

அவர் பயணம் செய்தது ஆக்ரோஷமான ஒரு புலியின் மீது. அவர் கழுத்தில் அணிந்திருந்ததோ ஒரு மிக நீண்ட விஷநாகம்.

'வழியில் தென்பட்ட பொதுமக்களைப் போலவே தன்னைக் கண்டவுடன் ஞானேஸ்வரரும் அவரது உடன்பிறப்புகளும் இப்படித் தானே அஞ்சி நடுங்கி ஓடுவார்கள். தம் எதிரில் நின்று பேசுவதற்கே அஞ்சுகிறார் ஞானேஸ்வரர் என்ற செய்தி பரவும். ஞானேஸ்வரரின் புகழ் மங்கும். தமது புகழ் மீண்டும் பெரிதாகத் தலையெடுக்கும்'

இப்படி எண்ணிய சாங்கதேவரின் முகத்தில் புன்முறுவல் ஒன்று தோன்றியது.




## அபங்க அமுதம்

**விட்டல நாமே விட்டல ஜாலே**
**தேஹபாவா விஸருனி கேலே**
**ஸர்வ காள விட்டல சித்தீ**
**ப்ரஹ்மானந்தே தே டுல்லதீ**
**விட்டல த்யானீ மனீ ஜனீ**
**விட்டல லோசனீ சிந்தனீ**
**நிளா ம்ஹணே போகீ த்யாகீ**
**விட்டல தயா ஜடலா ஆங்கீ**

**- நிலோபா மஹாராஜ்**

'உடல் என்ற ஒன்று இருப்பதையே மறந்து விட்டல நாமத்தை ஜபிப்பவர்கள் விட்டலனாகவே ஆகிவிடுகின்றனர். எப்போதும் விட்டலனை நினைப்பவர்கள் ஆனந்த வசமாகி ஆடுவார்கள். விட்டலனைக் கண்டு அவனையே சிந்திப்பவர்கள் சம்சாரியாக இருந்தாலும், சன்யாசியாக இருந்தாலும் அவர்கள் உடலில் விட்டலன் வருகிறான், குடிகொள்கிறான்.'

**எனக்குப் பிடித்த பாடல்!**

# மனசுக்குள்



"கறுப்புதான் எனக்குப் பிடிச்ச கலரு" என்ற பாடலின் "அன்று முதல் எனக்குத்தான் பூக்கள்மீது வெறுப்புதான்" என்ற வரியில் பல கேள்விகளும் பதில்களும் இலக்கிய நயமும் ஒளிந்து கொண்டுள்ளன.

கண்ணன் கறுப்பு நிறம். ஆயினும் கோபிகையர் மட்டுமின்றி ஆண்டாளும் அவனையே விரும்பினர். செம்பவள வாய்தான் தித்தித்திருக்குமோ, சொல்லாழி வெண்சங்கே என்று கேட்டவளாயிற்றே ஆண்டாள். அப்படி என்ன கறுப்பு நிறக் கண்ணன் மீது

"தெய்வத்தின் மார்பில் சூடிய மாலை
தெருவினிலே விழலாமா?
தெருவினிலே விழுந்தாலும் வேறோர் கை தொடலாமா"
"சொன்னது நீதானா, சொல், சொல், சொல், என்னுயிரே"

எனத் தொடங்கும் பாடல் வரிகள். கண்ணழகி தேவிகா, இந்தப் பாடலின் உணர்ச்சிகள் அனைத்தையும் தன் கண்களிலும் கண்ணீரிலும் காட்டியபடி இசைக்கருவி இசைத்தபடி பாடுவது அருமை. மருத்துவமனையில் உயிருக்

ஸ்டார் படத்தில் கவிஞர் வைரமுத்து எழுதிய 'மனசுக்குள் ஒரு புயல்' எனத் தொடங்கும் பாடலில் வரும்,

"மூங்கிலுக்குள் நுழைகின்ற காற்று
முக்தி பெற்றுத் திரும்புதல்போல
உன் மடியில் சொல்லாய் விழுந்தவன்
கவியாய் முளைத்தெழுந்தேன்" என்ற

வரிகள் இலக்கிய ரசனையை வளர்த்துவிடுபவை! மூங்கிலினால் செய்யப்பட்ட புல்லாங்குழலின் வழியாக வரும் மூச்சுக் காற்று

**வாசகர்களே!**
**உங்களுக்குப் பிடித்தமான பாடல் என்னவென்று... 10வரி கமெண்ட் டுடன் எங்களுக்கு எழுதி அனுப்புங்க...**
**kalki@kalkiweekly.com – க்கும் அனுப்பலாம்.**

# ஒரு புயல்!

காதலோ? ஒருவேளை, காமக் கடவுளான மன்மதன் கறுப்பு நிறம் என்பதாலோ? கறுப்பு நிறக் கண்ணனை விரும்பும் கோகுலக் காரிகையர் போன்றே இப்பாடலின் நாயகியும் கறுப்பு நிறக் காதலனையே விரும்புகிறாள். அவனை மட்டுமா? அவன் கறுப்பு என்பதாலேயே உலகில் உள்ள கறுப்பு நிறத்தின் அடையாளங்களை எல்லாம் சொல்லிச் சொல்லி நேசிக்கிறாள்.

- க.மோகன், சிதம்பரம்.



குப் போராடும் கணவன் முன் பாடுவார். தாம் இறந்தபின் அவள் மறுமணம் செய்து கொள்ள வேண்டும் என்று அவன் கூறுகையில், ''இன்னொரு கைகளிலே, யார், நான் நானா? எனை மறந்தாயா? ஏன், ஏன், ஏன், என்னுயிரே'' எனும் வரிகளே பாடலின் முழு பொருளையும், அவள், அவன் மீது கொண்டுள்ள அன்பையும் கூறிவிடுகிறது.

- உமாதேவி ஜனார்த்தனன், கோவை.



தெய்விகமான இசையாக மாறி நம் செவிகளுக்கு இன்பம் தருவதுபோல, தலைவியின் மடியில் சொற்களாய் விழுந்த தலைவன் அனைத்துலக ரசிகர்கள் ரசிக்கக்கூடிய செந்தமிழ்க் கவிதையாய் உயிர்த்தெழுந்தான் என்று சொல்லி, காதலை வெளிப்படுத்திய விதம் அருமை!

- வி.சி.வெங்கடேஷ், மலைக்கோட்டை.



''பால் போலவே வான் மீதிலே - நான் காணவே நீ காய்கிறாய்
நாளை இந்த வேளை பார்த்து ஓடி வா நிலா
இன்று எந்தன் தலைவன் இல்லை சென்று வா நிலா
தென்றலே என் தனிமை கண்டு இன்று போய்விடு''

தம்மை விட்டுப் பிரிந்துசென்ற தலைவனை (காதலனை) எண்ணி, தலைவி (காதலி) பாடுவதாக வரும் பாடல்கள் பல சங்கத்தமிழ் நற்றிணைப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

''வருவதாகச் சொன்ன நாளும் முடிந்தது, வந்து தருவதாகச் சொன்ன இன்பமும் தொலைந்து, மூடுகின்ற இமைகளுக்கு வேலையின்றி விழியிரண்டும் காடு நோக்கி வழிபார்த்துக் கதிகலங்கிக் காத்திருக்கும்'' என்று பலவாறாக ஏங்கிப் பாடுகிறாள். அந்தச் சங்கப் பாடலை ஒத்திருக்கிறது மேற்கண்ட வரிகள்.

- எம்.ஸ்ரீவித்யா, சென்னை-24.



ஸ்ரீநிவாசராகவன்,
திருவள்ளூர்

**என் அப்பாவுக்கு அறு பத்து மூன்று வயதாகிறது. அவருக்கு சமீபத்தில் கொலஸ்ட்ரால் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அவர் மருந்து மாத்திரைகளைத் தொடர்ந்து சாப்பிட்டு வந்தாலும், தினம் சாப்பிடும் உணவில் எதைச் சேர்க்க வேண்டும்; எதைத் தவிர்க்க வேண்டும்?**

சித்த மருத்துவர் பத்மப்ரியா:

''நுரையீரல்(liver)தான் சாப்பிடும் உணவிலுள்ள கொழுப்பை ஜீரணிக்கிறது. எனவே நுரையீரலைச் சரியான படி பார்த்துக்கொள்வது அவசியம். கொள்ளு ரசம், கொள்ளுப் பொடி, கொள்ளு துவையல் சாப்பிடலாம். மருதம் பட்டைச் சூரணம், சுக்கு, தனியா, சீரகம், மிளகு, ஏலக்காய் தலா பத்து கிராம் எடுத்துக்கொண்டு அதை வாணலியில் போட்டு வறுத்து, பொடி செய்து நான்கு தம்ளர் தண்ணீரைச் சேர்த்து கொதிக்க வைத்து டீ போல குடிக்கலாம். இதனால் கொலஸ்ட்ரால் உடலில் தங்காமல் ஜீரணமாகும் வாய்ப்பு அதிகம். ஜீரணம் சீரானாலே கொழுப்பு சேராது. திரும்பத் திரும்ப ஒரே எண்ணெய்யை, அதாவது அப்பளம் பொரித்த எண்ணெயிலேயே பொரியல் செய்வது, திரும்ப அதே எண்ணெயில் கடுகு தாளிப்பது போன்றவை செய்யவே கூடாது. எளிதாக ஜீரணம் ஆகக் கூடிய உணவுகளைச் சாப்பிடுவதும், பேக்கரி உணவுகளைத் தவிர்ப்பதும், அளவாகச் சாப்பிடுவதுமே கொலஸ்ட்ராலைக் கட்டுக்குள் வைக்க உதவும்.''



* கிருஷ்ணமூர்த்தி



ரேவதி, அடையாறு

**காலை உணவு எப்படி, எந்த நேரத்துக்குள் இருந்தால் நல்லது... எது சரியான அளவு?**

டயடீஷியன் கிருஷ்ணமூர்த்தி:

''காலை 7.30 மணியிலிருந்து 8.00 மணிக்குள் காலை உணவு சாப்பிட வேண்டும். தோசையம்மா தோசைன்னு ஒரு பாட்டு வரும். கேள்விப் பட்டிருக்கிறீர்களா? அந்தப் பாட்டில்

'தோசையம்மா தோசை
அம்மா சுட்ட தோசை
அப்பாவுக்கு நான்கு
அம்மாவுக்கு மூன்று
அண்ணாவுக்கு இரண்டு

# கொலஸ்ட்ரால்

பாப்பாவுக்கு ஒன்று' என்று ஒரு கணக்கு வரும்...

அதன்படி சாப்பிட்டாலே போதும். உடலுக்கு மிகவும் நல்லது. பெரும்பாலான வீடுகளில்

உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்
kacli என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர், உ

குடும்பத் தலைவிகள் காலை உணவைத் தவிர்த்து விடுகிறார்கள். இது ரொம்பத் தவறு. நாள் முழுக்கச் சுறுசுறுப்பாக வேலை செய்ய, காலை உணவு ரொம்ப அவசியம்.''

ஸ்வேதா, மயிலாப்பூர்

இரண்டாம் ஆண்டு பொறியியல் படிக்கும் மாணவி நான். என் சருமம் எப்போதும் வறட்சியோடே இருக்கிறது. இதற்கான க்ரீம்களை முகத்தில் தடவினாலும் சரியான தீர்வு கிடைப்பதில்லை. என்ன செய்யலாம்?


பத்மப்ரியா



# கல்கி கிளினிக்

# ஒளஷதபடிகள்!

வயது நிர்வாக நிபுணர் கௌசல்யாநாதன்: ''எந்த ஒரு க்ரீமையுமே (ஃபேஸ் வாஷ், மாய்ஸ்சரைஸர், சன் ஸ்க்ரீன்) முகத்தில் அப்ளை செய்வதற்கு முன் சருமத்துக்கு ஏற்றதுதானா என்பதை உறுதிசெய்த பிறகே பயன்படுத்த வேண்டும். வறண்ட சருமம் ஹைபோ தைராய்டால்கூட வர வாய்ப்பு இருக்கிறது. சோப்பை அடிக்கடி பயன்படுத்தாமல் இருப்பது, குளிர்ந்த நீரால் முகத்தைக் கழுவுவது, வாசம் இல்லாத தேங்காய் எண்ணெயைக் கொண்டு முகத்தை இருபது முதல் முப்பது நிமிடங்கள் மசாஜ் செய்வது... என முயற்சியுங்கள் ஸ்வேதா, நாளடைவில் நல்ல பலன் கிடைக்கும். பொதுவாகவே, எந்தவிதச் சருமமாக இருந்தாலும், புன்னகையோடும் மன இறுக்கம் இல்லாமலும் முகத்தைத் தளர்வாகவும் வைத்துக்கொண்டால், கூடுதல் பொலிவு கிடைக்கும்.''

kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில், ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

ஜெயா டி.வி.யில் ஒளிபரப்பாகும் 'விக்ஸ்'ஸின் 'கண்ணாடி' சமுதாய விழிப்புணர்வுக்கு நிச்சயம் உதவும். போதை, குடி, சிகரெட், புகையிலை என்று அடிமையாவதால் மனிதனுக்கு ஏற்படும் பாதிப்புகளை அலசி ஆராயும் இந்நிகழ்ச்சி, நிச்சயம் பலரின் கண்களைத் திறக்கும். இந்தத் தீய பழக்கங்களினால் பாதிக்கப்பட்டவர்களும் மனம் திறந்து தாங்கள் எப்படி இவற்றுக்கு அடிமையானோம், எப்படி மீண்டு வந்து வாழ்கிறோம் என்று கூறுகின்றனர். இந்நிகழ்ச்சியில் பங்கேற்ற மருத்துவர் குடிபோதைக்கு அடிமையானவர்களுக்கு இது கெட்ட பழக்கம் என்று கூறுவதைத் தவிர்த்து இதையும் ஒரு நோயாகத்தான் நாம் பார்க்க வேண்டும். அப்பொழுதுதான் ஆரம்ப நிலையிலேயே இதைக் குணப்படுத்த முடியும் என்றார். இந்நிகழ்ச்சியை அனுஹாசன் தொகுத்து வழங்குவது சுவாரஸ்யமாக உள்ளது. ஒரே ஒரு குறை. இந்நிகழ்ச்சியில் ஆங்கிலம் அதிகம் இருப்பதைத் தவிர்த்தால் பாமர மக்களும் பயன் அடைவார்கள்.

- உஷா,
சென்னை

ஜெயா ப்ளஸ் சேனலில் 'சிறகுகள்' என்ற பெயரில் புதுமையான டாக்-ஷோ ஒளிபரப்பாகி வருகிறது. டீன்-ஏஜ் வயதினர் மட்டுமே கலந்துகொள்ளும் வித்தியாசமான டாக்-ஷோ இது.

மாணவ - மாணவிகள் தங்கள் மனத்தில் உள்ளவற்றைத் தெளிவாகப் பேசுகின்றனர். அன்றைய தலைப்பின்படி 'பெற்றோரிடம் தாங்கள் எதிர்பார்ப்பது என்ன?', 'தங்களைப் பெற்றோர் இப்படி நடத்த வேண்டும்', 'பெற்றோரின் தவறுகள் இவை' என்று ஆரோக்கியமாக விவாதித்தனர். இளைய தலைமுறை தங்கள் தவறுகளைத் தவறென்று ஒத்துக்கொண்டது




# சின்னஸ் கீற்று!

டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்... 'சேனல் சாய்ஸ்' என்

வியப்பைத் தந்தது. ஒரு காம்பியரும், நடுவரும் நிகழ்ச்சியைச் சரியான பாதையில் நடத்திச் செல்கின்றனர். பெற்றோரும் பிள்ளைகளும் கண்டிப்பாகப் பார்க்க வேண்டிய நிகழ்ச்சி. பெற்றோருக்கும், பிள்ளைகளுக்கும் இடையே இந்நிகழ்ச்சி நல்லதோர் பாலமாய் விளங்கும்.

- குர்ஷீத் அஷ்ரப்,
கீழக்கரை

# சேனல் சாய்ஸ்

கலைஞர் டி.வி.யில் திங்கள் முதல் வியாழன்வரை இரவு 10 மணி முதல் 10.30 வரை ஒளிபரப்பாகும் 'விசாரணை' தொடர் நான் விரும்பிப் பார்க்கும் நிகழ்ச்சிகளில் முதன்மையானது. 'கின்னஸ்' சாதனையில் இடம் பெறப் போகும் 'க்ரைம் கிங்' ராஜேஷ்குமாரின் நாவல்களின் திரை வடிவமே இந்நிகழ்ச்சி. நான்கு நாட்களுக்குள் ஒரு நாவலை ரத்தினச் சுருக்கமாய், சுவைபட காட்சிகளை அமைத்து வியாழக்கிழமை க்ளைமாக்ஸைத் தொட்டுவிடும் டைரக்டர் சி. பிரபுவுக்கு நேயர் வட்டம் பெரிதாகிக்கொண்டே வருகிறது என்பதே நிதர்சனம். பல வெற்றிகரமான நாவல்கள் திரை வடிவில் மூலக்கதையைத் தவற விட்டுத் தள்ளாடும். ஆனால், ராஜேஷ்குமாரின் நாவல்களின் மையக்கரு சிதையாமல் வெளிக்கொணர்ந்தது சிறப்புத்தன்மையாகும். விரைவில் 50வது நாவலைத் தொட இருக்கும் ராஜேஷ்குமாரின் 'விசாரணை'த் தொடரே என் சாய்ஸ்.

- ஜி.கே.எஸ்.மூர்த்தி,
கோபிசெட்டிபாளையம்

ஜீ தமிழ் தொலைக்காட்சியில் ஞாயிறு தோறும் காலை ஒன்பது மணிக்கு ஒளிபரப்பாகும் 'கல்லூரி சாலை' நிகழ்ச்சியில் வேலைவாய்ப்புகள் அதிகம் உள்ள அதே நேரத்தில் பிரபலமாகாத படிப்புகள் குறித்த விவரங்கள் ஒளிபரப்பாகின்றன. பிளஸ்-2 படித்தவர்கள் அடுத்து என்ன கோர்ஸ் படிக்கலாம்? இளங்கலை முடித்தவர்கள் அடுத்து என்ன முதுகலை படிக்கலாம்? இதுபோன்ற கேள்விகளுக்கும் விடை தருகிறார்கள். வருங்காலச் சந்ததியினருக்கு இது உபயோகமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இதுவே எனக்குப் பிடித்த நிகழ்ச்சி.

- சரஸ்வதி இராஜேந்திரன்,
மன்னார்குடி.

பிரசுரமாகும் ஒவ்வொரு விமர்சனத்துக்கும் ரூ.50 பரிசு!

குறிப்பிட்டு எழுதுங்க. kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

# நேதாஜியை...


● அருணாசலம்

"அது 1942. சுதந்திரப் போராட்டம் வீறுகொண்டு எழுந்த காலக்கட்டம். சிங்கப்பூருக்கு நேதாஜி வர்றார். அப்ப ஐ.என்.ஏ. படையில நானும் ஒரு வீரன். சிங்கப்பூர்ல இருக்கற மூணு ஏர்போர்ட்லயுமே ஐ.என்.ஏ. வீரர்கள் அணிவகுத்து நின்னுருந்தாங்க. ஏர்போர்ட்டுக்கு வெளியே நேதாஜியைப் பார்க்க, ஏகப்பட்ட கூட்டம். கேலாங்க் ஏர்போர்ட்ல சோல்ஜர்கள் நாங்க அம்பத்தைஞ்சு பேரு நிக்குறோம். எங்களுக்கு அப்ப கேப்டனா இருந்தவர் நாராயணசாமி, திருவாரூர்க்காரர். நாங்க நிக்குற ஏர்போர்ட்ல வந்து எறங்குனார் நேதாஜி. எங்களுக்கு ஏகப்பட்ட சந்தோசம். அணிவகுப்பு மரியாதை தந்தோம். அப்பத்தான் நேதாஜியை ரொம்ப பக்கத்துல முதன் முதலா நான் பார்க்குறேன்!" என்று அந்தப் பரவசம் மாறாமல் பேசுகிறார். அருணாசலம். பட்டுக்கோட்டை மன்னங்காடு கிராமத்துக்காரர். ஊருக்குள் அவரை எல்லோரும் 'பச்சப்புள்ளை' என்றுதான் அழைக்கிறார்கள். சிங்கப்பூரில் பதினான்கு வருடம் இருந்துள்ளார் இந்தப் பச்சப்புள்ளை.

"எனக்கு அப்போ வயசு பத்து. சுதந்திரப் போராட்டம் தீவிரம் அடைஞ்சிட்டிருந்த காலம். தனியொரு மனுசனா உப்பு சத்தியாக்கிரக நடைபயணமா எங்க ஊருக்கு வந்திருக்கார் சர்தார் வேதரெத்தினம். நான் அவுருகூடவே ரெண்டு கி.மீ தூரம் நடந்து போனேன். 'நீ ரொம்ப சின்னப் பையன்'னு என்னை ஊருக்குப் போகச் சொல்லி விரட்டி விட்டார் வேதரெத்தினம். அப்பவே சுதந்திரப் போராட்டத்துல பங்கு கொள்ளணும்னு எம் மனத்துல ஓர் எண்ணம், சின்னத் தீப்பொறியா பத்திக்கிச்சு.

பதிமூணு வயசுல (1936) சிங்கப்பூருக்குக் கப்பல் ஏறிட்டேன். எனக்கு அரை டிக்கெட் பதினாறு ரூபா அஞ்சு அணா. எட்டு நாள் பயணம். போனதும் வீடுகளுக்கும் கடைகளுக்கும் தினசரி பேப்பர் போடுற வேலையில சேர்ந்துட்டேன். சிங்கப்பூர் அப்ப பிரிட்டிஷ் கவர்மெண்ட் கண்ட்ரோல்ல இருந்துச்சு. அங்க இந்தியர்கள் இருந்தாங்க. அவங்க மத்தியிலயும் சுதந்திரப் போராட்ட உணர்வு பொங்கிட்டு இருந்திச்சு.

வக்கீல் கோகோ (வட இந்தியர்) தலைமையில் நூறு பேர் ஒன்றிணைந்து 'இந்தியன் இளைஞர் கழகம்' உருவானது. அதுல நானும் ஒரு ஆளு. ஸ்கௌட் பாய் பயிற்சி. பிரிட்டிஷ் அரசுல கோர்ட்டுல வாதாடி, எங்களுக்குக் கட்டைத் துப்பாக்கி சுடுற பயிற்சி பெற்றுத் தந்தார் வக்கீல் கோகோ.



1939ல் நடந்த ரெண்டாவது உலகப் போர்ல ஜப்பான் அப்ப சிங்கப்பூரைத் தாக்குது. அந்தச் சண்டையில சிங்கப்பூர்ல காயம்பட்ட இந்தியர்களைக் காப்பாத்துற வேலைய, எங்களோட இந்தியன் இளைஞர் கழகம் செஞ்சது. நான் நெறைய பேரைக் காப்பாத்துனேன். ரெண்டாவது உலகப் போர் சமயத்துல சிங்கப்பூர், மலேஷியா நாடுகளைக் கைப்பத்துது யாரையுமே சொல்ல முடியாது. சர்தார் வல்லபாய் பட்டேலைக் கொஞ்சம் சொல்லலாம். 1945ல் சிங்கப்பூர் ஐ.என்.ஏ தலைமை கேம்ப்புல எங்க மத்தியில அரை மணி நேரம் பேசினாரு. நாங்க எல்லோருமே நேதாஜியைக் கடைசியா பார்த்தது அப்பத்தான்.

# நேர்ல பார்த்தேன்!

ஜப்பான்.'' மலரும் நினைவுக்குள் மூழ்குகிறார் பச்சப்புள்ளை.

''நேதாஜி சிங்கப்பூர் வர்றாரு. ஐ.என்.ஏ படையை விரிவுபடுத்துறாரு. அந்த மூணு வருசத்துல நேதாஜியைப் பல தடவை பார்த்திருக்கேன். கேப்டன்கிட்டதான் பேசுவார். நாங்க நெருங்கிப் போய்ப் பேச முடியாது. அவரைப் பார்க்குறதே பிரமிப்பா இருக்கும். அவருக்கு இணையா இந்த உலகத்துல வேற அந்த மீட்டிங் ரொம்ப உருக்கமா இருந்திச்சு. கூட்டம் முடிஞ்சு விமானம் ஏறிப் போனவர்தான். நேதாஜி என்ன ஆனாரு... எப்படி இறந்தாருங்கற விவரம் இன்னமும் முழுசா தெரியலை!'' என்கிற மன்னங்காடு அருணாசலத்தின் கண்கள் உணர்ச்சிப் பிழம்பால் பனிக்கின்றன.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



மருத்துவமனை செல்ல 108 சேவையைப் பயன்படுத்துவதாகக் காட்டியிருக்கிறார்.

### டைட்டானிக் ஐந்தரை மில்லியன்!

லண்டனின் லாயிட்ஸ் நிறுவனம் உலகத்தின் மிகப் பழைமையான இன்சூரன்ஸ் கம்பெனிகளில் ஒன்று. இதன் நிறுவனர் எட்வர்டு லாயிட். இவர் ஆரம்பத்தில் காஃபி ஷாப் நடத்தியவர். உலகத்தின் முதல் ஆகாய விமானத்தை இவர்தான் இன்சூர் செய்தார். அமெரிக்காவின்

# கடத்திச் சென்றால்

### கங்க்ரார்ட்ஸ் கலைஞர்!

தம் உயிர்காக்க இலவசமாக ஆபரேஷன் செய்ய உதவிய கலைஞர் காப்பீட்டுத் திட்டத்துக்காக முதலமைச்சருக்குச் சிறுமி, நன்றி தெரிவித்து கடிதம் எழுதும் 'கலைஞருக்கு நன்றி' விளம்பரமும், தமிழக அரசின் 108 அவசர சிகிச்சை ஆம்புலன்ஸ் சேவை விளம்பரமும் சின்னத்திரையிலும், சினிமா தியேட்டர்களிலும் இன்று மிகவும் பிரபலம். இந்த இரண்டு விளம்பரங்களையுமே உருவாக்கியது சென்னையைச் சேர்ந்த என் அன்டு டி கம்யூனிகேஷன்ஸ் நிறுவனத்தின் தலைவரான நாச்சியப்பன். 'இந்த இரண்டு விளம்பரங்களையுமே வறுமைக் கோட்டுக்குக் கீழே இருப்பவர்கள் அல்லது அவசர சிகிச்சை தேவைப்படுபவர்கள் மட்டுமின்றி தமிழ்நாட்டின் அனைத்துத் தரப்பினரது கவனத்தையும் ஈர்க்கும் வகையில் எடுப்பது பெரும் சவாலாக இருந்தது' என்று கூறும் நாச்சியப்பன் கலைஞர் காப்பீட்டுத் திட்ட விளம்பரத்தில் புத்திசாலித்தனமாக 108 சேவையையும் தொடர்புபடுத்தி, காப்பீட்டுத் திட்டப் பயனாளி அவசரமாக

விண்வெளி வீரர்கள், ஹாலிவுட்டின் நட்சத்திரங்கள், தொழிலதிபர்கள் என்று இவரது பாலிசிதாரர்களின் பட்டியல் நீளமானது. டைடானிக் கப்பல் மூழ்கியபோது இவர்களின் சுமார் ஐந்தரை மில்லியன் டாலர் நஷ்ட ஈடு பரபரப்பாகப் பேசப்பட்டது. ஒரு பிரபல மாடல் ஃபோட்டோகிராபர், தம் மாடல் திடீரென்று திருமணம் செய்துகொண்டுவிட்டால், தம் தொழில் பாதிக்கப்பட்டு விடுமே என்று ஒரு லட்சம் டாலருக்கு இன்சூரன்ஸ் செய்துகொண்டார். இவர்கள் லவ் இன்சூரன்ஸ், ஹேப்பினஸ் இன்சூரன்ஸ் என்றெல்லாம் பாலிசிகள் வழங்கி இருக்கிறார்கள்.

உலகத்தின் சில நாடுகளில் மிகவும் விசித்திரமான இன்சூரன்ஸ் திட்டங்கள் உள்ளன. பிரிட்டன் குட்ஃபெல்லோ ரெபாக்கா இன்சூரன்ஸ் நிறுவனம், வேற்று



கிரகவாசிகள் அவர்கள் பூமிக்கு உங்களைக் கடத்திக்கொண்டு போனால் நஷ்டஈடு அளிக்கும் திட்டம் ஒன்றை வைத்திருக்கிறார்கள். இத் திட்டத்தின்படி நஷ்டஈடு பெற உங்களை வேற்றுகிரகவாசிகள் கடத்திச் சென்று விட்டதாக உங்கள் குடும்பத்தினர் நிரூபிக்க வேண்டும்.

### பணக்காரர்கள் சாய்ஸ்!

மெக்ஸிக்கோ, பிலிஃபைன்ஸ், கம் போடியா போன்ற நாடுகளில் கடத்தல், பிணையத் தொகை இன்சூரன்ஸ் திட்டம் உள்ளது. சமூக விரோதிகள் உங்களைக் கடத்திக்கொண்டுபோய், பிணையத் தொகை கேட்டால் இவர்கள் அந்தப் பணத்தைக் கொடுத்து மீட்க மாட்டார்கள். பதிலாக, உங்கள் குடும்பத்தினர் அந்தத் தொகையைக் கொடுத்து, உங்களை மீட்டபிறகு, அந்தத் தொகையை நீங்கள் இன்சூரன்ஸ் கம்பெனியிடமிருந்து கேட்டுப் பெறலாம். அந்நாட்டுப் பணக்காரர்கள் மத்தியில் இந்த இன்சூரன்ஸ் திட்டம் மிகவும் பிரபலமாம்.

# காப்பீடு!

### திருமண விருந்து

அமெரிக்காவில் ஒரு திருமணம் என்றால் சராசரியாக 23 ஆயிரம் டாலர்கள் செலவாகுமாம். திருமணத்துக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டு, எதிர்பாராத காரணத்தால் திருமணம் நின்று போனால்? அதற்கும் இன்சூரன்ஸ் பாலிசி எடுத்துக் கொள்ளலாம். திருமணத்தின் போது எதிர்பாராத விதமாக ஏதாவது தகராறு ஏற்பட்டு பொருட்கள் சேதமடைந்து விட்டாலும், நஷ்டஈடு கிடைக்கும்.

- மௌலி

ஃப்ரேரா ஹாலிவுட்டின் புன்னகை இளவரசி. அவரது பற்கள் அத்தனை அழகு. அவற்றை ஒரு கோடி டாலருக்கு இன்சூர் செய்தார்.

இசைக்கலைஞர் ஜீன் சிம்மன்ஸ் தம் நாக்கை ஒரு கோடி டாலருக்கு இன்சூர் செய்துகொண்டார்.

ரோலிங் ஸ்டோன் இசைக்குழுவின் அஸ்திவாரமே கிடாரிஸ்ட் கேய்த் ரிச்சர்ட்ஸ்தான். அவர் தம் நடுவிரலை இரண்டு கோடி டாலருக்கு இன்சூர் செய்தார். அமெரிக்க டி.வி. பிரபலமான மேரி ஹார்ட் தம் கால்கள் இரண்டையும் இன்சூர் செய்த பாலிசியின் மதிப்பு பத்து லட்சம் டாலர்.

உயிரைக் கொடுக்கும் நண்பர்கள் (விஷ்ணு, ஸ்ரீகாந்த்) உயிரை எடுக்கும் அளவுக்கு விரோதி ஆவதுதான் துரோகி படத்தின் கதை. யாராவது ஒருத்தன் எவனையாவது கொல்ல மாட்டானா என சலிப்புகொள்ளும் அளவுக்கு சதா இருவரும் முறைத்துக்கொண்டு அலைகிறார்களே தவிர... ஒன்றும் நடக்கவில்லை

விஷ்ணு ஆக்ஷனுக்கு மாறி இருக்கிறார் அவ்வளவுதான். ஆனால் அவரது குறுந்தாடியில் பழைய விஷ்ணுதான் மாற்றமில்லை. போலீஸ் டிரெஸ்ஸில்கூட அந்தத் தாடி தேவையா?

ஸ்ரீகாந்த் முன்பைவிட இளமையிலும் துள்ளலிலும் கலக்கி இருக்கிறார். ஆனால் ஆக்ஷன் காட்சிகளில் கோபத்துக்குப் பதில் இலேசான புன்னகையை உதட்டில் வழிய விடுவது சொதப்பல்.

பூஜாவும் பூர்ணாவும்பாத்திரத்தில் ஒட்டியும் ஒட்டாமல் வருவது உறுத்தல். தியாகராஜனின் பக்குவப்பட்ட நடிப்பு தெளிந்த நீரோடை.

புதிதாகக் கட்டப்பட்டுக் கொண்டிருக்கும் உயரமான கட்டடத்தில் இரண்டு தாதாக் கோஷ்டிகள் மாத்தி மாத்தி சுட்டுக்கொள்வதைக் காட்சிப்படுத்தி பிறகு போலீஸ் துறையின் உயரதிகாரிகள் அவர்களுக்கு அட்வைஸ் பண்ணுவது தமிழ் சினிமாவில் மட்டும்தான்...

பெண் இயக்குனர் சுதா, தமது முதல்படத்தை ஒரு ஆக்ஷன் படமாக முடிந்தவரை நன்றாக எடுக்க முயற்சித்திருப்பதற்குப் பாராட்டுகள்.

- மகிமைராஜன்



# துரோகி



# பார்க்கும் பூக்கள்!



விண்வெளி அன்னம்!

கதைகள், கவிதைகள், பரிசுப் போட்டி...

# நாளைய நம்பிக்கை!

# கோகுலம்

குழந்தைகளின் குதூகலம்!

அக்டோபர் 2010 விலை ரூ8/-



**ரங்கநாயகி:** ஹெல்த், மெடிக்கல் இன்ஷூரன்ஸ் எல்லாக் குடும்பங்களுக்குமே தேவையானவை. மாதாந்திரம் அல்லது ஆண்டுதோறும் அதிக பிரீமியம் கட்டினாலும், மெடிக்கல் இன்ஷூரன்ஸ் கொடுக்கும் பயன் அதிகம்தான். நிறைய இன்ஷூரன்ஸ் கம்பெனிகளுக்கு கிளைமுக்குப் போகும்போது இது சரியில்லை, அது சரியில்லை என ஏதோ ஒரு சாக்குப் போக்குச் சொல்லி செட்டில் பண்ணாமல் தட்டிக் கழிக்கிறார்கள். ஒரு இன்ஷூரன்ஸ் எடுக்கறோம்னா, அந்த கம்பெனியோட நம்பகத்தன்மையை ஒரு தடவைக்கு நூறு தடவை செக் செய்துதான் பாலிசிகளை எடுக்க வேண்டும். தேவையில்லாமல் இந்த இன்ஷூரன்ஸ், அந்த இன்ஷூரன்ஸ் என்று எடுத்துக் கொள்வதில் பயன் இல்லை.



**வேங்கடசுப்ரமணியன்:** நிறைய வீடுகள்ல சித்தப்பா, பெரியப்பாக்களோட இன்ஷூரன்ஸ் மார்க்கெட்டிங் தொந்தரவு தாங்காமதான் வாங்கு வாங்க. தெருவுல போற பிச்சைக்காரனுக்கு நாம காசு போடறோமோ இல்லயோ ஆனா, நமக்கு தெரியாமலேயே நம் காசு யாரோ ஒருவர் இறந்த பிறகு ஒரு தானம் செய்யறா மாதிரி போகுது. நமக்கு முன்ன பின்ன தெரியாத நபர்களுக்கு இதன் வழியா நாம உதவி செய்யறோம். ஒரேடியா எல்லா பணத்தையும் இன்ஷூரன்ஸ்ல போட்டு விடக்கூடாது. அதற்கும் ஒரு லிமிட் வைத்துக் கொள்ள வேண்டும்.






– என்.எஸ்.கே.

**பாலாஜி:** இந்தியாவில் இன்ஷூரன்ஸ் பெரிய வியாபாரமாகி விட்டது. அதிகமாகச் சம்பாதிக்கறவங்க வரி விலக்குக்காக ஏகப் பட்ட இன்ஷூரன்ஸ் பாலிசி எடுக்கறாங்க. இதுல எந்தெந்த பாலிசி எதுக்குன்னு அவங்களுக்கே தெரியறதில்ல. இன் ஷூரன்ஸ் பிசினஸ்ல இருக்கறவங்களுக்கும் அதைப் பத்தி புரிதல் அவ்வளவா இல்லை. ஏதோ பாலிசி எடுக்க வெச்சோமா நாலு காசு கமிஷனா பார்த்தோமான்னுதான் போய்க்கிட்டு இருக்காங்க.



இதுல ஹெல்த் இன்ஷூரன்ஸ் படுத்தற பாடு ரொம்ப மோசம். சாதாரணமா 200 ரூபான்னு டாக் டர் ஃபீஸ் வாங்கற எடத்துல ஹெல்த் இன்ஷூரன்ஸ் இருக்கா அப்போ ஃபீஸ் 500 ரூபான்னு கணக்குச் சொல் றாங்க.



# இன்ஷூரன்ஸ்: இம்சையா? ஈஸியா?

**நிர்மலா:** இன்ஷூரன்ஸ் வியாபாரத் துறையினருக்கு ரொம் பவே பலன் அளிக்குது. குடோன் களில் இருக்கும் அவர்களது சாமான்கள் ஏதாவது விபத்தில் சிக்கினாலோ அல்லது அவர் களது சாமான்களை ஓர் ஊர் விட்டு இன்னொரு ஊருக்கு அனுப் பும்போது அதற்கு ஏதாவது பங்கம் ஏற்பட்டாலோ அந்த இடத் தில் வியாபார ரீதியாக நஷ்டம் ஏற்படாமல் அவர்களைப் பார்த்துக் கொள்வது இன்ஷூரன்ஸ்தான். வருமான வரி விலக்கு, திடீரென நோய்வாய்ப்பட்டுப் போகும்போது அந்தச் சிகிச்சைக் கென கரம்கொடுப்பதும் இன்ஷூரன்ஸ்தான். இதை மனித வாழ்வின் இதயம் என்றுகூடச் சொல்லலாம்.



**வே**லிப்படலைத் திறக்கும்போதே அப்பா இல்லாத வெறுமையை அறிவித்தது வீடு.

வெறிச்சோடிக் கிடந்தது திண்ணைகள். வெளியிலிருந்து பின்கட்டுக் கொல்லை வரை உறைந்து கிடந்தது அமைதி. அப்பா இருந்தவரை சப்தங்களால் நிறைந்திருந்த வீடு.

வீட்டின் சுவர்களும், தரைகளும் குரல்கள் கேட்க ஏங்கிக்கொண்டிருந்தன. அதன் மௌன ஏக்கத்தை உணர முடிந்தது.

உதிர்ந்து கிடந்த காய்ந்த சருகுகள். வீட்டின் முன்புறம் பிரிந்து தொங்கிய பந்தல், சேகரிக்காமல் விழுந்து கிடந்த பாதாம் காய்கள், உள்ளிருந்து வெளியில் ஓடிய ஆடு, ரப்பர் குழாய் வழியே போய்க்கொண்டிருந்த தண்ணீர் எல்லாமே பொறுப்பான மனிதர் போய் விட்டதைக் கூறியது.



சந்தானம், ஓரமாய் சைக்கிளை நிறுத்தினான். குழாயில் காலைக் கழுவிவிட்டு, நிறுத்தி, ரப்பர் டியூபைத் தூக்கிச் சுருட்டி வைத்தான். பாதாம் காய்களைப் பொறுக்கித் திண்ணையில் போட்டுவிட்டு, வேலிப்படலை இழுத்துக் கட்டினான்.

வேப்ப மரத்தின் அடியில் மரம் வெட்டுவதற்கான கோடாலி, தாம்புக் கயிறு இருந்தன. நல்ல கனமான அடி பருத்த வேப்ப மரம். அது செடியாக இருந்த காலத்திலிருந்து தினசரி காலையில் அதற்குப் பூஜை செய்வது அம்மாவின் வழக்கம்.

ஒவ்வொரு குழந்தை பிறக்கும்போதும் ஒரு மரம் நடுவது அப்பாவின் வழக்கம். சந்தானம் பிறந்தபோது வேப்பமரம். சேகருக்கு பாதாம். மணிக்கு மாமரம். எல்லோருக்கும் திருமணம் ஆகி, குழந்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான சிறுகதைகள்**

**7**




# கணக்கு

தைகள் பிறக்க, மரங்கள் வீடு தாண்டி வெளியில் போய், சிரத்தையுடன் அவற்றைப் பராமரித்தார் அப்பா.

'நம்ம குழந்தைகளுக்கு நாம தர வேண்டியது சுத்தமான, சுகாதாரமான சுற்றுப்புறம்தான்' என்பார் அப்பா. ஆனால் அவர் நட்ட மரங்கள்தான் இன்று வெட்டி விலை பேசக் காத்திருக்கிறது. பார்த்துப் பார்த்து அழகு செய்த வீட்டை விற்கத்தான் மூன்று பிள்ளைகளும் வந்திருக்கிறார்கள். அம்மாவை ஆளுக்கு நாலு மாதம் வைத்துக் கொள்வதாகக் கணக்கு.

சந்தானம் திண்ணைப்படி ஏறினான். முன்புறம் பெரிய கல்யாணக்கூடம். தாண்டி முற்றம். தாழ்வாரம், ரேழி, பழைய காலக் கிராமத்து வீடு. முழுக்க முழுக்க நிசப்தம்.

சமையல் உள்ளில் அவன் மனைவி கமலா.

''வந்துட்டீங்களா?'' என்றாள். ''காப்பி வேணுமா?''

''குடு'' - தரையில் அமர்ந்து சுவரில் சாய்ந்து காலை நீட்டிக்கொண்டான். சிமெண்ட் பால் போட்டு வழவழவென்று தேய்த்த தரை. பெரிய, பெரிய மண் பானைகளில் வருடாந்திர சாமான். அப்பா சாண எரிவாயு அடுப்புப் போட்டிருந்தார்.

இந்த இடம் வீட்டின் இதயம். யார் வந்தாலும் காலையில் எழுந்ததும் இந்த இடத்தில் கூடி விடுவார்கள். காப்பி குடித்தபடி எல்லாக் கதையும் பேசிக் கலையும். ஒரே நேரத்தில் இருபது பேர் அமரலாம்.

கமலாவுக்குப் பிடித்த வீடு இது. ''நம்ம சென்னை வீட்டை இந்தக் கிச்சன்ல அடக்கிடலாம்'' என்பாள்.

மனத்தில் சலிப்பேற்பட்டால் போய் வர பெரிய, பெரிய பிரகாரங்கள் கொண்ட சிவன் கோயில். உதவிக்கு ஓடி வரும்... பார்த்தாலே புன்னகைக்கும் கிராமத்து மனிதர்கள்.

சொர்க்கம் இந்த ஊர். ஆனால் காசே பிரதானமாகி அதைத் துரத்திக்கொண்டு ஓடுவதில், வாழ்வில் சொர்க்கத்தை இழந்து விட்டோம் என்று நினைத்துக்கொண்டான் சந்தானம்.

''அம்மா எங்கே?''

''பின்னாடி இருந்தாரே.''

அம்மா கொல்லையில் மாமரத்தின் அடியில் நின்றிருந்தாள்.

**அ**ம்மாவைத் தனியாகக் கற்பனை செய்ய முடியவில்லை. அப்பாவின் நிழல்

**ஜி.ஏ.பிரபா**

அவன். குறுமுனி போல் முழங்கால்வரை ஏற்றிய வேஷ்டி. கதர் ஜிப்பா. முழு வழுக்கைத் தலை. காந்தி கண்ணாடியில் அப்பாவை நினைத்தால் கூடவே அம்மாவின் உருவம்.

இந்தச் செடிகளை, மரங்களை இருவரும் தங்கள் குழந்தைகள் போல்தான் பராமரித்தார்கள். ஒரு மரம் பட்டுப்போக விட்டதில்லை.

இதில் அப்பாவைப் பார்க்கிறாளோ?

அம்மா மெல்ல மரத்தைத் தடவி தந்தாள். தொண்டையில் உப்பு கரித்தது.

இதன் அடியில்தான் அப்பா இறந்தார். மதியம் சாப்பிட்டு இதன் அடியில் கட்டில் போட்டுப் படுத்தவர் எழவில்லை. ஒரு வருடம் முடிந்துவிட்டது. காலம்தான் எத்தனை வேகமாக ஓடுகிறது? இழப்பின் வலியோடு. அதன் ஓட்டத்துக்கு ஈடு கொடுக்க வேண்டிய கட்டாயம். ஏதோ தவிப்பு. சொல்ல முடியாத இறுக்கம் அம்மாவுக்குள் இருப்பதை உணர முடிந்தது சந்தானத்துக்கு.

''என்னம்மா இங்க நின்னுட்டே?'' - தோள் தொட்டான்.

''அப்பாவோட கைராசி அது'' பூரிப்பு அம்மாவிடம்.

''கொள்ளையா காய்க்கும். தினமும் மாங்காய் சாதம். பச்சடி, தொக்கு, ஊறுகாய்தான். சந்தைக்குக் கொடுத்ததுபோக மிச்சத்தை இங்க பக்கத்து வீடுகளுக்குத் தந்துடுவார் அப்பா'' - அம்மாவுக்குப் பழைய ஞாபகங்கள்.

''இதையும் வெட்டப் போறியா?''

''தெரியலைம்மா...''

''நல்லாக் காய்க்கிறது சந்தானம்.''

அம்மாவை இங்கிருந்து நகர்த்துவது தண்ணீரிலிருந்து மீனைத் தூக்கித் தரையில் போடுவது போல், ஆனால் வேறு வழி?

வீட்டுக்குள் பரவும் காற்றில் அப்பாவின் மூச்சுக் காற்றும் இருப்பதாய் நினைக்கிறாள் அம்மா. நினைவுச் சுரங்கம் இது. வெறும் கல்லும், மண்ணுமா வீடு.

''யார் வாங்கறா?''

''தெரியலைம்மா. பட்டு மாமா வர்றார்.''

''கிராமத்து வீடு. மூணு, நாலுக்குள்ள வருமா?''

''அவ்வளவுதான் வரும்.''

அம்மா ஒவ்வொரு இடமாகத் தடவித் தடவி நகர்ந்தாள்.

''இங்கதான் அப்பா உங்களுக்கு எண்ணெய் தேச்சு, குளிக்க விடுவார். இது சஷ்டியப்த பூர்த்தியப்போ சமையல் செஞ்ச இடம். இது சேகர் பிறந்த ரூம். அப்பா இங்கதான் படுத்து ரெஸ்ட் எடுப்பார்.''

தனக்குத் தானே பேசியபடி நகர்ந்தாள் அவளின் ஞாபக அடுக்குகளில் நிறைய சம்பவங்கள் நிறைந்திருந்தன. திருமணமாகி இந்தக் கிராமத்துக்கு வந்த நாள் முதல் பார்த்த மனிதர்கள், சம்பவங்கள், நிகழ்வுகளைத் தொட்டுச் சென்றது குரல்.

''சாப்டியாம்மா?'' - கேட்டான்.

''ஆச்சுடா. கமலா அப்



பவே தந்துட்டா'' என்ற அம்மா நிறுத்தி, ''கமலா நல்ல பொண்ணுடா'' என்றாள்.

''எல்லாருமே நல்லவங்கதாம்மா'' - சந்தானம். ''சேகர், மணியோட மனைவிகள் வேலைக்குப் போறதால அப்படி ஒட்ட முடியறதில்லை.''

அம்மா மையமாய் தலையசைத்தாள். ஆனால், கமலா அளவு அவர்கள் ஒட்டுவதில்லை என்பது மறுக்க முடியாத உண்மை. அவர்களுக்கு அம்மா கிராமத்து மனுஷி. ஒன்றும் தெரியாது.

சந்தானம் பேச்சை மாற்றினான்.

பதில் சொல்லாமல் அம்மா அடுத்ததுக்கு நகர்ந்தாள். சந்தானம் மீண்டும் உள்ளே வந்தான். பரணில் இருந்த சாமான்கள் எல்லாம் முற்றத்தில் இறங்கியிருந்தன. அப்பாவின் மேஜை, டேபிள், சின்ன மர பீரோ, கைத்தடி, பித்தளைப் பாத்திரங்கள், மர ஊஞ்சல்.

விஜய் - அசின் இணையும் மூன்றாவது படத்துக்கு காவலன் என்ற பெயர் ஒரு வழியாக முடிவாகிவிட்டது. காவல்காரன், காவல் காதல், காதலுக்குக் காவல்காரன்.... என்றெல்லாம் பெயர்கள் அடிக்கடி மாறிக்கொண்டிருந்தது குறிப்பிடத்தக்கது. ''இது எனது வழக்கமான ஃபார்முலா படமல்ல. காதலுக்கு மரியாதை பூவே உனக்காக மாதிரி... மனசின் மென்மையான பக்கங்களை ஒத்தியெடுக்கும் படமாக இருக்கும். அதற்கு நானும்; இயக்குநர் சித்திக்கும் கிரையாண்டி. ஸ்வீட், க்ளீன், சிம்பிள் படமாக இருக்கும் என்பது மட்டும் நிச்சயம் என்கிறார்'' விஜய்

சந்தானம் அதில் இடித்துக் கொண்டான் என்று கழற்றி மேலே போட்டிருந்தார் அப்பா. இருபது வருடத்துக்கும் மேலாகப் பரணில் கிடக்கிறது. சந்தானத்துக்கே ஐம்பது வயதுக்கு மேல் ஆகிறது. அவனுக்கு ஒரே பெண். திருமணம் ஆகி, கைக் குழந்தையுடன் தில்லியில் இருக்கிறாள்.

சந்தானத்துக்கு பிஸினஸ். பண்ணை ஆய்வகத்துக்கு வேண்டிய பொருட்களை வாங்கி, விற்கும் தொழில்.

அவன் பெண்ணுக்குக் குழந்தை பிறந்தப்போ, பின்பக்கம் வேப்பஞ்செடி நட்டு வைத்தார் அப்பா. அதையும் வெட்டுவதா?

துணுக்கென்றது.

மனித மனம் நம்பிக்கை, உணர்வுகளால் பின்னப்பட்டிருக்கிறது. 'சென்டிமெண்ட்.'

ஒருவேளை அதுதான் வாழ்வதற்கான உத்வேகத்தைத் தருகிறதோ?

''என்னப்பா சந்தானம்?'' - பட்டு மாமா வந்துவிட்டார்.

''மணியும் சேகரும் எங்கே?''

''இப்ப வந்துடுவாங்க.''

''அம்மா, முதல்ல எங்க? சென்னையா, மும்பையா?''

''இனிதான் முடிவு செய்யணும்?''

''அம்மாவால அங்க இருக்க முடியுமா?''

''...''

''நீங்களும் இங்க வர முடியாது.''

''ஆமாம்.''

''அப்பா சாமானை எல்லாம் இறக்கி வெச்சாச்சா?''

''ஆச்சு மாமா. நீங்களே நின்னு வேணுங்கறதைப் பிரிச்சுத் தந்துடுங்கோ.''

''சரி'' பட்டு மாமா உள்ளே நகர, மீண்டும் கமலாவிடம் வந்தான்.

''பட்டு மாமாவுக்கு ஒரு காஃபி கமலா.''

''இதோ... நிமிஷத்துல ஆகிடும்.''

''சாமானை எல்லாம் பிரிக்கப் போறார். நீ உனக்கு வேணுங்கறதைப் பாத்து எடுத்துக்கோயேன்.''

''எனக்கு எதுக்கு?''

"அப்பாவோட ஞாபகமா!"

"இந்த ஜடப் பொருள்களை வச்சுத்தான் அப்பாவை ஞாபகப்படுத்திக்கணுமா?"

பொட்டில் அடித்ததுபோல் இருந்தது.

உண்மைதான். இந்த ஜடப்பொருள்தான் அப்பாவா?

எத்தனை ஒரு போலித்தனமான வாழ்க்கை முறைகள்? முதியோர் இல்லத்தில் இறந்த பெற்றவர்களுக்கு, திதி அன்று ஊரைக் கூட்டி விருந்து போடுவது போல்தான்.

'டேய்' என்ற அப்பாவின் அதட்டல் இப்போதும் காதில் ஒலிக்கிறதே.

"காஃபி ரெடி"- கமலாவின் குரலில் கலைந்தான்.

தடால், தடால் என்று சாமான்கள் நகர்த்தும் சத்தம். அம்மா இடுப்பில் கை வைத்து நின்றிருந்தாள். பின் நகர்ந்தாள். மீண்டும் உள்ளே வந்தாள். வெளி வாசலுக்கும், கொல்லைக்கும் மாறி, மாறி நடந்தாள். வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தாள்.

என்ன உணர்வுகள் அவளைத் துரத்துகின்றன?

தெரியவில்லை.

சேகரும், மணியும் தேடித்தேடி சாமான்களைச் சேகரித்திருந்தார்கள். ஆளுயர நிலைக்கண்ணாடி பதித்த தேக்கு மேஜை. கண்ணாடி ரசம் போயிருந்தது.

வாழ்க்கை, கண்ணாடி போல்தான். ஒன்று உடைகிறது. அல்லது ரசம் போய் விடுகிறது.

"வேணுங்கறதை எடுத்துண்டு மத்ததை வித்துடலாம்" - மணி. "அதையும் பங்கிடலாம்."

"நீ சொன்னா சரி."

"பெரிசா என்ன வந்துடப் போறது"- சேகர்.

சிரித்தபடி நகர்ந்தான் சந்தானம். மணி, சேகருக்குக் காசுதான் குறி. மனித உணர்வுகளுக்கு முக்கியத்துவம் தரத் தெரியாது.

இப்போதே அவர்களிடம் சலிப்பு... புலம்பல்.

"எங்க சம்பளத்துல சிட்டியில சமாளிக்கறதே கஷ்டம். இதுல அம்மா வேற. கொஞ்சம் அட்ஜஸ்ட் செஞ்சிண்டா தேவலாம்."

ஆனால் அப்பா இவர்களிடம் எதையும் எதிர்பார்த்ததில்லை.

சொந்த வீடு. ஒரு ஏக்கர் நிலம் இருந்தது. விற்றுப் பிள்ளைகளைப் படிக்க வைத்தார். உரக் கடையில் வேலை. ஆனாலும் நிறைவாக இருந்தார்.

"நாங்க பணம் தரணுமாப்பா?" மணி, சேகர் இருவரும் கேட்டார்கள்.

"சே...சே... எனக்கு இந்தச் சம்பளம் போதும். நீங்க உங்கக் குடும்பத்தைப் பாருங்கப்பா..." என்பார்.

**சந்தானத்துக்கு உடனே அம்மாவைப் பார்க்க வேண்டும் போல இருந்தது!**

சந்தானம் வேணுமா என்று கேட்க மாட்டான். மாசியில் குலதெய்வம் கோயிலுக்கு வரும்போதெல்லாம் கமலா வருடாந்திர உப்பு, புளி, பருப்பு வாங்கிப் போட்டு விடுவாள்.

எல்லாவற்றுக்கும் புன்னகைதான் அப்பாவிடம் கிடைக்கும்.

"கொஞ்சம் தள்ளுங்க" - கமலா அரிசியுடன் பின்பக்கம் போனாள். பக்கத்து வீட்டுக் கோழி, குஞ்சுகளுடன் உள்ளே வந்திருந்தது.

"இதான் தாய்க்கோழி" - கமலா. "இந்தக் குஞ்சுகள் நாளைக்கு அம்மாவைப் பாக்குமா," அவள் தன் பாட்டுக்குப் பேசி, வீட்டு உள்ளே போனாள்.

திக்பிரமை பிடித்து நின்றான் சந்தானம்.

அவ்வப்போது கேள்விகளால் அவனை நிலைகுலைய வைத்து விடுகிறாள் கமலா. பதில் தெரியாத கேள்விகள்.

சந்தானத்துக்கு உடனே அம்மாவைப்

பார்க்க வேண்டும் போல் இருந்தது. தேடியபடி முன்பக்கம் வந்தான்.

அவனை உருக வைத்து, நெஞ்சைப் பிழிய வைத்த காட்சியாய் இருந்தது அது. கலங்கி நின்றான் ஒரு நிமிஷம்.

வழக்கமாய் அப்பா படுக்கும் திண்ணையில் குறுகிப் படுத்திருந்தாள் அம்சமாக. ஒரு கை திண்ணையைத் தடவிக் கொண்டிருந்தது. இந்த வீடு, திண்ணை அவளுக்கு அப்பாவாகத் தெரிகிறதா?

பாதுகாப்பு உணர்வு அப்பாவின் கைகள் இதமாய் அரவணைக்கும் சுகமோ?

"அம்மா" - குனிந்து அழைத்தான் "ஏன் படுத்துட்டே?"

"ப்ச். சும்மா" - சலிப்பு, விரக்தி... போடா என்கிற அலுப்பு.

"சாமான்களைப் பிரிச்சுட்டானா?"

"ஆயிட்டிருக்கு."

வேண்டாத, விரும்பாத மௌனத்துக்குப் பின் அம்மா கேட்டாள்.

"ஏன் சந்தானம்?"

"சொல்லும்மா..."

"ஒவ்வொருத்தர் வீட்டுலேயும் நான் கரெக்டா நாலு மாசம்தான் இருக்கணுமா?"

அந்த நிமிடம் சந்தானம் புதிதாய்ப் பிறந்தான். உள்ளே இலக்கில்லாமல் திரிந்த அத்தனை கேள்விகளுக்கும் அந்த நிமிடம் பதில் கிடைத்தது. மிகுந்த புத்துணர்ச்சியும் மனநிறைவும் அவனுள் பரவ, "இல்லம்மா" என்றான்.

"பின்ன?"

"நீ இங்கியே இரு. வீட்டை விற்கப் போறதில்லை."

"ஏன்?" - விஷயம் தெரிந்த சேகர், மணியிடம் அதிர்ச்சி.

"வீடுங்கறது ஜடப்பொருள் இல்லை மணி. உணர்வு, அம்மாவோட இருப்பு இங்கதான் இயல்பா இருக்கும். குறிப்பிட்ட வயசுக்குப் பிறகு அவ இயல்புப்படி, சுதந்திரமா வாழ நாமதான் விட்டுத் தரணும். அம்மாங்கறது கடல் மாதிரி சேகர். அதிலிருந்து உருவான மழைத்துளிகள்தான் நாம. கடலைத் தேடிதான் மழைத்துளி வரணும். பெண்ணுக்கு மட்டுமில்லை. ஆணுக்கும் தாய்வீடு அவசியம். நமக்கும் இளைப்பாற ஒரு இடம் வேணும்."

"வீட்டை வித்து வர பணத்துல கணக்குப் போட்டிருந்தேன்" - மணி முணுமுணுத்தான்.

"பரவாயில்லை. என்ன விலை போகும்னு விசாரி. நானே வாங்கிக்கறேன். பிஸினஸ்தானே. எங்கிருந்து செஞ்சா என்ன? அம்மா என்கூட இருக்கட்டும்."

"ஃபுல்லா நீயே வெச்சுக்கறியா?"

"ஆமா... மூணு பசங்களை வயத்துல சுமக்க அம்மா கணக்குப் பாக்கறதில்லை. ஆனா, அவளை வச்சிக்க நாம கணக்குப் பாக்கறோம்."

"இந்தச் சாமான் எல்லாம்?" இழுத்தான் சேகர்.

"உங்களுக்கு வேணுங்கறதை எடுத்துக்குங்க. எனக்கு எதுவும் வேண்டாம்."

அம்மாவின் காய்ந்து, உலர்ந்த முகச் சுருக்கங்களில் ஈர மலர்ச்சி. வாய் திறந்து சிரித்தாள்.

"உன் கூடத்தான் முழுசா இருக்கப் போறேனா?"

"இல்லம்மா... உன்கூட நாங்க இருக்கப் போறோம்."

"தலைவருக்கு 'லேப்டாப்' அன்பளிப்பா கொடுத்தது தப்பாய் போச்சா... ஏன்?"

"இவ்வளவு சின்ன சூட்கேஸை வச்சுக்கிட்டு நான் என்ன பண்றதுன்னு கேட்கறார்!"

- எஸ்.பொருநை பாலு





# டி.பாலசுந்தரம்

**கே. ஜகந்நாதன், சேலம்.**

நம் நாட்டில் வங்கிகளின் செயல் முறையில் பல வகையான திட்டங்கள் நிறைவேற்றப் படும் நிலையில், ஓய்வூதியம் பெறுபவர்களுக்கு என்றே தனியாக வங்கிக் கிளைகள் திறக்கலாமே?

உங்களது நோக்கம் நல்லதுதான். வங்கிகளின் பெரும்பான்மையான வருமானம் டெப்பாசிட்டு களைக் குறைந்த வட்டியில் பெற்றுச் சற்றே அதிகவட்டிக்குக் கடன் கொடுப்பதுதான். வங்கி டெப்பாசிட்தாரர்களுக்குக் கொடுக்கும் வட்டிக் கும் வங்கிக் கடன் வாங்கியவர்களிடம் வசூலிக் கும் வட்டிக்கும் இடையே உள்ள வித்தியாசம் தான் வங்கிகளின் லாபம். வங்கிகள் பல சர்வீஸ் களுக்கு சார்ஜ் செய்தாலும் வட்டி வித்தியாசத் தில் உள்ள வருமானம் மட்டுமே பெரிய அளவு லாபத்தைத் தருகிறது. இதனை மனத்தில் கொண்டே வங்கிகள் செயல்படுகின்றன. இன் றைய போட்டியான வியாபாரச் சூழலில் ஓய்வூதி யம் பெறுவோருக்காகத் தனிக்கிளை திறப்பது லாபகரமாக இருக்காது. ஏனென்றால் பிக்சட் டெப்பாசிட்டுகள் பெற்றுக்கொள்வது, பென் ஷன் கொடுப்பது தவிர வேறு பிசினஸ் ஏதும் இருக்காது. மேலும் வியாபார ரீதியாகச் சரியாக வும் இருக்காது.

**வி.ஜி. சத்தியநாராயணன், சென்னை - 61**

சில மியூச்சுவல் பண்டுகளில் 36 மாதம் லாக் இன் பீரியட் என்கிறார்களே? அது நமது சமயத்துக்கு உதவாத பணமாகி விடுமே? இதைத் தடுக்க செய்யவேண்டியது என்ன?

மியூச்சுவல் பண்ட் அனைத்துத் திட்டங் களிலும் இந்த லாக் இன் பீரியட் இருக்காது. சில திட்டங்களில் முதலீட்டுக்கு வரிச்சலுகை இருப்பதால் முதலீட்டாளர் முதலீடு செய்த சிறிது காலத்திலேயே திரும்பக் கேட்டுப் பெற்றுக் கொண்டு விடுவதால், இதைத் தவிர்க்கவே, லாக் இன் முறை. மேலும் சில மியூச்சுவல் பண்ட் திட்டங்களின் முதலீட் டுக் குறிக்கோள் நீண்ட கால முத லீடுகளைச் செய்வதாக இருப்பதால் முதலீடு செய்த பணத்தை இடை யில் திருப்பி எடுப்பது இயலாது. ஆகவே அப்படித் திருப்பிப் பெறு வதைத் தடுக்க லாக் இன் உதவியாக இருக்கும். இதுபோன்ற முதலீட்டுக் கொள்கையுடைய திட்டங்களில் முதலீட்டாளர் செய்த முதலீட்டுத் தொகையினைக் குறிப்பிட்ட காலத் துக்குத் திரும்பப் பெற இயலாத வாறு நல்ல திட்டங்களில் முதலீடு செய்வார்கள். குறைந்தது மூன்று வருட லாக் இன் பீரியட் இருக்கும். இவ்வகைக் காலக்கெடு வரிச்சலுகை களுக்கு உதவுகின்ற திட்டங்களில் தான் இருக்கும். அதுவும் மத்திய அரசால் நிறுவப்பட்ட செபி (SEBI) என்கிற மியூச்சுவல் பண்டு களைக் கண்காணிக்கும் அமைப்பின்

## அதென்ன

நிர்வாகத்தால் கண்காணிக்கப் பட் டும் மற்றும் செபியின் சட்டத் திட் டங்களுக்கு உட்பட்டும் இந்தத் திட் டங்கள் செயல்படும். இத்திட்டத் தால், முதலீட்டாளருக்கு வரிச் சலுகை, முதலீடு வளர்ச்சி கிடைப்ப தால், இது சமயத்துக்கு உதவாத பணமாகாது. இச்சலுகை வேண்டா திருப்பின் லாக் இன் திட்டத் திலிருந்து ஒரு குறிப்பிட்ட சமயத் தில் ஒரு சிறிய தொகையை நெட் அசட் வேல்யூவில் (NAV) எக்சிட்

உங்கள் கேள்விகளை 'மூலதன மந்திரம்' என்று குறிப்பிட்டு அனுப்ப
KAFIN என்று டைப் செய்து. ஒரு ஸ்பேஸ் விட்டு, கேள்வி, பெயர்,

லாடு(விருப்பத்தின் பேரில் திட்டத்தில் இருந்து இடையிலேயே வெளியேற செலுத்த வேண்டிய கட்டணம்) செலுத்தி விலகிக் கொள்ளலாம்.

**ஜி. குப்புசாமி, சங்கராபுரம்**

**இன்றைய நிலையில் மியூச்சுவல் பண்டில் இன்வெஸ்ட் செய்யலாமா?**

இன்றைய சூழ்நிலையில் மட்டுமல்ல என்றைய சூழ்நிலையிலும் மியூச்சுவல் பண்டில், Systematic Investment Plan (SIP) முறையில் தாராளமாக முதலீடு செய்யலாம். மேலும் கூட்டுப் பலனின் பெருக்கும் சக்தியை எப்போதுமே குறைவாக எடை போடக்கூடாது. நீங்கள் நீண்ட காலத்துக்கு முதலீடு செய்தால் அது உங்களுக்கு நிச்சயமாகப் பலனளிக்கும். மாதந்தோறும் உங்கள் வருவாயிலிருந்து முதலீடு செய்யப்பட்ட சிறிய தொகையானது உங்கள் ஓய்வு காலத்தின்போது பன்மடங்குப் பெருகி கணிசமான தொகையாகத் திரும்பப் பெறலாம்.

## லாக் இன் பீரியட்?

பங்கு விலைகள் குறைவாக இருக்கும் போது முதலீடு செய்வது நல்லதாயிற்றே என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் எப்போது பங்குகளின் விலை குறைகிறது என்பதை கணிப்பதும் சிரமம் அல்லது கண் குத்திப் பாம்பாகப் பார்த்துக்கொண்டிருப்பதும் சிறு முதலீட்டாளர்களுக்குச் சாத்தியமில்லாத ஒன்று. ஆகவே, சிறு தொகைகளைத் தொடர்ந்து முதலீடு செய்வது விலை ஏற்ற இறக்கங்களைச் சமன் செய்துகொள்ள மிகவும் உதவும்.





lki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். செல்ஃபோனில்
யேவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.

● எம்.மிக்கேல்ராஜ்,
சாத்தூர்

?'திரைப்படங்களில் பகுத்தறிவு கருத்துச் சொல்ல பயப்படக்கூடாது. பகுத்தறிவு கொள்கை வெறி எல்லா இயக்குநர்களுக்கும் இருக்க வேண்டும்' என குஷ்பு தயாரிக்கும் பட விழாவில் கலைஞர் பேசியிருக்கிறாரே?



*நொறுங்கும் நம்பிக்கை!

! பகுத்தறிவு, திரைப்படங்கள் உள்பட எல்லாத் துறைகளிலும் தேவைதான். ஆனால், அது வெறியாக மாறக்கூடாது. அது தவறான திசைகளில் நம்மை இட்டுச் சென்று தோல்வியையே தழுவச் செய்யும்.

● ஜி.மகாலிங்கம், காவல்காரபாளையம்

?'வருகிற சட்டசபைத் தேர்தலுக்குள் மதுக் கடைகளை, தமிழக அரசு முழுமையாக இழுத்து மூடாவிட்டால், டாஸ்மாக் கடைகளை அடித்து நொறுக்குவோம்' என்று டாக்டர் ராமதாஸ் ஆவேசமாகப் பேசியுள்ளாரே?

!'சட்டசபைத் தேர்தலில் வென்று டாஸ்மாக் கடைகளை மூடுவோம்' என்று சொல்லியிருந்தால் பா.ம.க. தலைவரைப் பாராட்டலாம். 'அடிப்போம்' 'நொறுக்குவோம்' என்பது ஜனநாயகத்தில் நம்பிக்கையே இல்லாதவர்களின் பேச்சு.

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

?இனி வாரத்துக்கு ஐந்து முட்டையாமே?

! தேர்தல் ஸ்பெஷல் தாராளங்கள் மேலும் தொடரும்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை

? பக்கவாதத்தால் பாதிக்கப்பட்ட மலேசியா வாசுதேவனை எஸ்.பி.பாலசுப்பிரமணியனும் கங்கை அமரனும் தவிர வேறு எந்த சினிமா பிரமுகர்களும் சென்று நலம் விசாரிக்காதது அவரை மிகவும் மனம் நோகச் செய்துள்ளதே?

!முடிந்தவர்கள் போய்ப் பார்த்திருக்கிறார்கள்; முடியாதவர்கள் இனி நேரம் ஒதுக்கிப் போய்ப் பார்க்கலாம். அவரவர் தனிப்பட்ட சௌகரியங்களைப் பொறுத்து. மலேசியா வாசுதேவன் போன்ற சாதனையாளர்கள், இதையெல்லாம் நினைத்து மனம் வருந்தத் தேவையில்லை. குணமடைந்து புதிய சாதனைகள் படைக்கும் மன உறுதிதான் முக்கியம்.

● மா.உலகநாதன்,
திருநீலக்குடி

?பன்றிக்காய்ச்சல் விஸ்வரூபம் எடுத்துள்ளதே?

! தொற்றுநோய்கள் 'ஸீஸன்'லாக திரும்பவும் முளைவிடும் என்பது தெரிந்ததுதானே! பனிச்சென்று



*எனக்கு, எனக்கே!

# நீங்கள் கேட்டவை

## தராசு

நடவடிக்கை எடுக்கவேண்டிய அரசாங்கம், அந் நோய் கட்டுக்குள் இருக்கிறது என்று பிரகடனப்படுத் துவதிலேயே காலத்தை விரயமாக்கிவிடுகிறது. நோய் ஓவர்டேக் செய்தபிறகு ஓவர்டைம் வேலைக்கு அவசியம் ஏற்படுகிறது.

● எஸ்.வி.பக்கிரிசாமி, புதுச்சேரி

*? ஈரோடு அருகே புதிதாகக் கட்டப்பட்ட சமத் துவபுரத்தின் திறப்புவிழா முடிந்த சில தினங்களுக் குள், சுற்றுப்புற மதில் சுவர் இடிந்துவிட்டதாகச் செய்திகள். அரசுநிதி பாழாவதுடன் வீடுகளின் லட்சணம் எப்படி இருக்கும் என்று சந்தேகம் வருகிறதே?*

# இனி வாரத்துக்கு ஐந்து முட்டையாமே?

திணிக்கும் பகுத்தறிவு!

! லஞ்ச-ஊழல் எல்லா துறைகளிலும் சமத்துவத் துடன் பரவியிருக்கிறபோது, முதல்வரின் கனவுத் திட்டங் கள் மட்டும் விதிவிலக்குத் தீர்வுகளாக இருக்க முடியுமா என்ன!? அரசுநிதி என்பது மக்களி டமிருந்து வசூலிக்கப்படும் வரிப் பணம் என்பதையும் நினைவு கொள்ளுங்கள்.



சமாளிப்புத் தலைவர்

● சரா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி *

*? தகவல் அறியும் உரிமைச் சட்டத்தின் கீழ் அரசு நிர்வாகத்தின் ஊழல்களை அம்பலப்படுத்திய சமூக நலத்தொண்டர் ஒருவர் கொலை செய்யப்பட்டுள் ளது குறித்து...?*

! தகவல் அறியும் சட்டப் போராளிகளை வீழ்த்த மிகப்பெரிய வன்முறை வலைப்பின்னல் (கூலிப்படை) உருவாக்கப் பட்டுச் செயல்படுவதாகத் தக வல்... அடியாள் பலத்தால் அர சியலில் நீடிப்போர் உருவாக் கியுள்ள அபாயச் சூழல் இது. இந்தச் சூழ்ச்சியை முறியடிக்க ஒரே வழி, ஒவ் வொரு குடிமகனும் சமூக நலத் தொண்டராக மாறி, தகவல் அறியும் சட்டத்தை அடிக்கடி முறைப் படி பயன்படுத்தி, அதன்மூலம் அரசியல்வாதிகளையும் அதிகாரிகளை யும் கட்டுக்குள் வைப்பதுதான்.

● சங்கீத சரவணன், மயிலாடுதுறை

*? வீட்டு மனைகளாகவும், இரவா*

ஆலயங்களாகவும், ஆட்சி அலுவலகங்களாகவும் மாறிப் போன குளங்களை, கால்வாய்களைச் சீரமைக்க, தமிழக அரசு பல கோடிகளை ஒதுக்கியுள்ளதைப் பற்றி...?

! தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்க வாரி இறைக்கும் வரிப்பணம்!



*ஆராய்ச்சி மணி!



*மின்ன வருத்தம்

☐ ரூ.150/ பரிசு பெறுபவர்:
மா. உலகநாதன், திருநீலக்குடி

* ரூ. 75/ பரிசு பெறுபவர்:
சரா.எ. முரளி, கள்ளக்குறிச்சி

● வே.முருகேசன், சென்னை-88

? தி.மு.க-காங்கிரஸ் கூட்டணி வலுவாக உள்ளது என்று தங்கபாலு அடிக்கடி கூறிக் கொண்டிருக்கிறாரே?

! அவர் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக நியமிக்கப்பட்டிருப்பதே இப்படிப் பேசிச் சமாளிக்கத்தான். 'மத்தியில் காங்கிரஸ் தலைமை நீடிக்க, தமிழ்நாடு காங்கிரஸ் பலிகடா ஆக்கப்படுகிறது' என்று வெளிப்படையாக அவரால் கூற முடியுமா?!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

?'இந்தியாவில் பணம் இருப்பவர்களுக்கு மட்டுமே மதிப்பு. இருபது சதவிகிதம் மக்களே மனசாட்சிப்படி நடந்து கொள்கிறார்கள். மூவரில் ஒருவர் ஊழல் பேர்வழி' என்று டிரான்ஸ்பரென்ஸி இன்டர்நேஷனல் அமைப்பு கூறியுள்ளதே?

! பலே... நல்ல தகவலைச் சொன்னீர்கள். சுமார் 25 கோடி மக்கள் மனசாட்சிப்படி இன்றும் நடந்துகொள்கிறார்கள் என்பது சந்தோஷம்; ஆச்சர்யம், பிரமிப்பு... கூடவே ஆறுதல்!

● பெ.பொன்ராஜபாண்டி, மதுரை

? வோட்டுக்குப் பணம் பெற்றவர்கள் அதை ஒரு நாளில் சாப்பிட்டுவிடுகின்றனர். பணம் கொடுத்தவர்கள் ஐந்தாண்டுகள் சாப்பிடுகின்றனர் என அன்புமணி ராமதாஸ் கூறுகிறாரே?

!ரொம்ப சரி, அன்புமணி! 'ஐந்தாண்டுகள் தொடர்ந்து மக்களைச் சுரண்டிச் சாப்பிடுகின்றனர்' என்பது ரொம்ப ரொம்பச் சரியான ஆராய்ச்சி மணி!

● எம்.எ.உத்தரா, மதுரை-17

?அவுட்சோர்சிங் வேலை இனி கிடையாது என அடிக்கடி அணுகுண்டு போடும் அமெரிக்க அதிபர் ஒபாமா, இந்தியாவுக்குச் செல்வதை மகிழ்ச்சியோடும் ஆவலோடும் எதிர்நோக்குவதாகச் சொல்கிறாரே... இது முரணாகத் தோன்றவில்லையா?

! முரண்பாடு ஏதுமில்லை. இரண்டுமே அமெரிக்காவின் நலனை உத்தேசித்து விடுக்கப்பட்டுள்ள அறிக்கைகள்தாம். 'நீ என் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருவாய்? உன் வீட்டுக்கு நான் வந்தால் என்ன கொடுப்பாய்?' என்கிற கதைதான்! ●

உங்கள் கேள்விகளை 'தராசு' என்று குறிப்பிட்டு kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில், **KAGQA** என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.

என்றும் உங்களுடன்

# மங்கையர் மலர்

# VBC Jewellery

HOUSE OF VUMMIDI

இணைந்து வழங்கும்



# 'வைர மங்கை'

## -சிறப்பு சந்தா திட்டம்!*



கல்கி நிறுவனத்தின் மற்றொரு வெளியீடான, தரத்திலும் நம்பர் ஒன் மகளிர் மாத இதழ் மங்கையர் மலர் செப்டெம்பர் இதழில், 'வைர மங்கை' - சிறப்பு சந்தா திட்டம் (பக்கம் 187) பற்றிய அறிவிப்பு வெளியாகியுள்ளது. இத்திட்டத்தின்படி எந்த ஒரு நபரும் மங்கையர் மலருக்கு சந்தா கட்டி, ஐந்து முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த லாம். அப்படி அறிமுகப்படுத்துபவர் பவள மங்கை என்ற பட்டம் பெறுவார். பவள மங்கைக்கும் (ரூ.250/- மதிப் புள்ள) முத்து மங்கைகளுக்கும் (ரூ.100/- மதிப்புள்ள) பரிசுக் கூப்பன் கள் அந்த மாத இறுதிக்குள் அனுப்பி வைக்கப் படும்.

ஒவ்வொரு மாதமும் குறைந்த பட்சம் முப்பது முத்து மங்கைகளை அறிமுகப்படுத்துவதன் மூலம், பவள மங்கையிலிருந்து பதவி உயர்வு பெற்று மரகத மங்கை என்ற மகுடம் சூட்டப்படும்.

இவ்வாறு முப்பது சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் முதல் இருபது அதிர்ஷ்டசாலிகளின் புகைப்படம் அடுத்து வரும் மங்கையர் மலர் இதழில் வெளியாகும். கூடவே 'வைர மங்கை' பம்பர் பரிசுக் குலுக்கலில் கலந்து கொள்ளவும் அவர்கள் தகுதி பெறுவார்கள்.

'கல்கி' நிறுவனத்தின் மற்றொரு வெளியீடான நமது மங்கையர் மலர் இதழின் அன்புவட்டம் விரிவடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் கொண்டு வரப்பட்ட இத்திட்டத்துக்கு, வாசகியரின் ஏகோபித்த வரவேற்பைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறோம். கல்கி வாசகர்களையும் இத்திட்டத்தில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

நீங்களும் வைர மங்கை ஆகணுமா? அதற்கான கூப்பன் அடுத்த பக்கத் தில்...

(ஆர்)

மேலும் விவரங்களுக்கு

94443 83465 / 99400 73736



ஜூலை, ஆகஸ்ட், செப்டெம்பர்... என்று அடுத்தடுத்து மூன்றாவது முறை மரகத மங்கையாக மகுடம் சூட்டிக் கொண்டு அசத்தி வரும் சுசிலா அரவிந்தனுக்கு ஒரு ஓஹோ... ஓஹோஹோ!!



ஆகஸ்ட், செப்டெம்பர்... என்று அடுத்தடுத்து இரண்டாவது முறை மரகத மங்கையாக மகுடம் சூட்டிக் கொண்டு அசத்தி வரும் வசுமதி கண்ணனுக்கு ஒரு ஓஹோ!!

## மங்கையர் மலர் - VBC இணைந்து வழங்கும் 'வைர மங்கை' சிறப்பு சந்தா திட்டம்

அன்பு அனுஷா நடராஜனுக்கு, பவள மங்கையான நான் (தற்போதைய மங்கையர் மலர் வாசகி), மங்கையர் மலரை, 5 முத்து மங்கைகளுக்கு அறிமுகப்படுத்துகிறேன். தாங்கள் கொடுத்துள்ள இந்த படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து, 5 ஓராண்டு சந்தாதாரர்களின் தொகையாக, ரூ.1250/- மங்கையர் மலர் என்ற பெயரில் டி.டி/M.O மூலம் இணைத்துள்ளேன். என்னுடைய 5 முத்து மங்கை தோழிகளுக்கும், மங்கையர் மலர் இதழை அடுத்த மாதத்திலிருந்து அனுப்பி வைக்கவும். எனக்கும் என் தோழிகளுக்குமான பரிசுக் கூப்பன்களையும் அனுப்பி வைக்கவும். மேலும் பல முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த என்னால் இயன்றவரை முயலுகிறேன்.

### பவள மங்கை

எனது பெயர் :........................................

முகவரி:........................................

........................................

........................................

சந்தா எண்: (தாங்கள் சந்தாதாரராக இருந்தால்)

........................................

ஃபோன்: ........................................

ஈமெயில்........................................

### நான் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள்:

1. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

2. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

3. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

கல்கி

4. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

5. பெயர் : ........................................

முகவரி : ........................................

........................................

........................................

ஃபோன்:........................................

ஈமெயில்........................................

உறையின் மீது 'வைர மங்கை' என்று குறிப்பிட்டு அனுப்பவும்

இப்படிக்கு

### அனுப்ப வேண்டிய முகவரி

*மங்கையர் மலர் சந்தா பிரிவு, மங்கையர் மலர்,*
*கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,*
*ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032*

தேதி:........................................

# சாமி உங்களுக்கு டிரான்ஸ்பரா?



"இந்த மாத்திரையை வெறும் வயித்துல சாப்பிடக் கூடாது."

"அப்ப டிஃபனுக்கு காசு கொடுங்க டாக்டர்?"

"!!??"

— வி.சாரதி டேச்சு

"கபாலி உன்னை ஜெயிலில் பார்க்கிறது இதுதான் கடைசியாக இருக்கணும்."

"சாமி உங்களுக்கு டிரான்ஸ்பர் கிடைச்சிட்டதா?"

— எம்.அசோக்ராஜா



# நடக்குமென்பார்; நடக்கும்

## மேஷம்

திருமண முயற்சி வெற்றி தரும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். உடல் நிலையில் கவனம் தேவை! நீண்ட தூர பிரயாணம் செய்ய வேண்டி இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். வேலையில் உயர்வு கிட்டும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கடன் பிரச்னை தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். பரிகாரம் தேவை இல்லை.

## ரிஷபம்

குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். பூர்வீக சொத்து பாகப் பிரிவினை ஆகும். இல்லற வாழ்வில் விட்டுக் கொடுத்து அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. யாரிடமும் வாக்குவாதம் தவிர்க்கவும். கூட்டாளிகளை விட்டுப் பிரிந்து செல்ல நேரிடும். சுபகாரிய முயற்சிகள் கைகூடி வரும். மன உளைச்சல் தீரும். குரு வழிபாடு செய்துவர கஷ்டங்கள் விலகும்.

## மிதுனம்

வெளிநாடு செல்லும் யோகம் வந்து சேரும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். புதிய வீடு/மனை வாங்கும் யோகம் கிட்டும். சனீஸ்வர பகவானை வழிபட்டு வர நற்பலன் கிட்டும்.

## கடகம்

வேலையில் இடமாற்றம் உண்டாகும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். மனத்தில் உற்சாகம் ஏற்படும். பிள்ளைகளால் நற்பலன் உண்டாகும். கடன் பிரச்னை தீரும். வம்பு வழக்கு முடிவுக்கு வரும். வர வேண்டிய நிலுவைகள் வந்து சேரும். வியாழன் தோறும் குரு கடவுளை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

## சிம்மம்

திருமண காரியம் கைகூடி வரும். பணப் பிரச்னை இருக்காது. உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார். பூர்வீகச் சொத்து கை மாறிப் போகும். நண்பர்கள் விலகிப் போவார்கள். தொழில் ரீதியில் ஆதாயம் கிட்டும். வியாபாரத்தை அபிவிருத்தி செய்ய நேரிடும். ராகு/கேது வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

## கன்னி

மறைமுக எதிர்ப்புகளால் தொல்லை அதிகரிக்கும். உத்தியோகத்தில் சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். சுபகாரியப் பேச்சுவார்த்தை சற்று தள்ளிப் போகும். உறவினர்களால் கஷ்டங்கள் ஏற்படும். இல்லற வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. கடன் பிரச்னை தலை தூக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்கும். ராகு/ கேது/ குரு/சனி ஆகியோரை வழிபட்டு வர சங்கடம் தீரும்.

# 26.09.2010 முதல் 02.10.2010 வரை

## தஞ்சை பரத்வாஜ்

### துலாம்

வாகனங்களில் செல்லும்போது உஷார். பொருளாதார கஷ்டம் இருக்காது. தூர தேசம் செல்ல வேண்டி இருக்கும். வீடு/வாகனம் வாங்கும் யோகம் வந்து சேரும். எதிர்ப்புகள் விலகும். கல்வி வளம் மேலோங்கும். வழக்கு வெற்றிபெறும். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் சுவாமிக்கு துளசி மாலை சாற்றி அர்ச்சனை செய்துவர சங்கடங்கள் தீரும்.

### மகரம்

சுபமான செய்திகள் தேடி வரும். எண்ணிய எண்ணங்கள் யாவும் ஈடேறும். பூமி மூலம் ஆதாயம் கிட்டும். கடன் தொல்லை தீரும். மனத்தில் நிம்மதி ஏற்படும். படிப்பில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உற்றார், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். திடீர் தனயோகம் கிட்டும். செலவுகள் பயன் உள்ளதாக அமையும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். வழக்கு வெற்றி அளிக்கும்.

### விருச்சிகம்

குடும்ப வாழ்வில் அனுசரித்து நடந்துகொள்வது நல்லது. யாரிடமும் வாக்குவாதம் செய்வதைத் தவிர்க்கவும். கல்வியில் அக்கறை எடுத்துப் படிப்பது நல்லது. கொடுக்கல் வாங்கலில் உஷாராக இருப்பது நல்லது. வாகனங்களில் செல்லும்போது உஷார். வர வேண்டிய பணம் தாமதப்படும். ராகு/கேது/குரு ஆகியோரை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

### கும்பம்

குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். கூட்டாளிகள் விட்டுப் பிரிந்து செல்ல நேரிடும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். கடன் பிரச்னை அதிகரிக்கும். பொன், பொருள் சேரும். உடல் ஆரோக்கியம் சீராகும். மனசஞ்சலம் தீரும். செலவுகள் அதிகரிக்கும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். சனி/ராகு/ கேதுவை வழிபட்டு வர நற்பலன் உண்டாகும்.

### தனுசு

உத்தியோகத்தில் இடம் மாற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி நற்பலனை அளிக்கும். கணவன் மனைவிக்குள் மனக்கசப்பு உண்டாகும். கல்வி வளம் மேலோங்கும். வீடு மாற்றம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். மனசஞ்சலம் அதிகரிக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். குரு/ராகு/கேது/சனி ஆகியோரை வழிபாடு செய்து வர சங்கடம் தீரும்.

### மீனம்

உத்தியோகத்தில் மாறுதல் ஏற்படும். பணத் தேவைகள் அதிகரிக்கும். வரவேண்டிய பணம் வந்து சேர கால தாமதம் ஆகும். வீடு மாற்றம் உண்டாகும். கல்வி வளம் மேலோங்கும். உறவினர் வருகையால் சந்தோஷம் கிட்டும். தொழில் துறையில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். ராகு/கேது/சனி/குருவை வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

# காலை எழுந்தவுடன் சிரிப்பு!

# 13

சில்க் ஸ்மிதா என் தோழிகளுள் முக்கியமானவர். உடம்பைப் பாதுகாப்பதில் ஸ்மிதா எடுத்துக்கொள்ளும் அக்கறை மாதிரி வேறு யாரும் எடுத்து நான் பார்த்ததில்லை. சிக்கன்மேல அவளுக்கு அவ்வளவு உயிர். அவ பேர 'சிக்கன் ஸ்மிதா'ன்னுகூட மாத்தி வெச்சிடலாம். ஆனா அதுலகூட நாலு துண்டுக்கு மேல தொடவே மாட்டாங்க, என்ன ருசியா இருந்தாலும்.

அவங்க செய்யுற எல்லாத்துலேயும் ஒரு மெத்தனம், தெனாவட்டு தெரியும். அவங்க பேச்சு மட்டுமல்ல; செயலிலும் ஒரு ஸ்லோமோஷன் தெரியும். ஸ்லோமோஷன்தான் அவங்களை ஸ்வீட் கவர்ச்சியா காண்பிச்சது. ஷூட்டிங் நடக்கிறப்ப நான் ஆடியன்ஸ்கிட்டே பாசமாய் வலிய போய் பேசுவேன். ''ஸார் அன்னிக்குக்கூட அந்த ஷூட்டிங்கில் உங்களப் பாத்தேனே. நல்லா இருக்கீங்களா? கூட ஒரு லேடி இருந்தாங்களே அவங்க வரலையா?''ங்கிற மாதிரி கேட்பேன்.

உடனே சில்க் கூப்பிட்டு, ''ஏங்க இப்படி இருக்கீங்க. நாம நடிக்கிறோம்; அவங்க பாக்குறாங்க. அவ்வளவுதான். இதுக்குப் போய் எதற்கு இவ்வளவு அட்டாச்மெண்ட்டா ஆடியன்ஸ்கிட்டே பேச்சு? நீங்க என்னதான் கொஞ்

எனக்த ஏங்

சிப் பேசினாலும் இந்த எடத்த விட்டுப் போன உடனே நம்மள மனுஷியாகக்கூட மதிக்காம நம்மள கேவலமாத்தான் பேசுவான்க... ஏன் உங்களுக்குத் தெரிய மாட்டேங்குது'' என்று திட்டுவார் சில்க் ஸ்மிதா.

நானும் அவங்களும் ஒரு படத்தில நடிச்சப்ப, பதற்றத்தோடு டயலாக் மனப்பாடம் பண்ணிக்கிட்டு இருப்பேன். ரெண்டு டேக் ஆனாலே வெட்கமா போயிடும். ஆனா, ஸ்மிதா கவலையே படாம லிப்ஸ்டிக் போட்டுக்கிட்டு இருப்பாங்க. ''ஐயோ டயலாக்க படிக்கலையா''-ன்னா ''எனக்கு எதுக்குப் பக்கம் பக்கமா டயலாக்கை கொடுத்தான்க? ஜனங்க ஜாலியா பாக்கிறதுக்கு என்னை கிளாமர்க்குத்தானே போட்டான்க. அப்புறம் ஏன் படிக்கச் சொல்லி டயலாக்'' என்று அசட்டையாகச் சொல்லுவாங்க.

# டயலாக்?



**ஊர்வசி**

தந்தைப் பெரியார்கிட்டே ஒரு இளைஞன் வேலைக்கு சிபாரிசு செய்யச் சொல்லி வந்தானாம். வந்தவன் கால் மேல கால் போட்டு உட்கார்ந்திருந்தானாம். பெரியார்கூட இருந்தவங்க கால மேல இருந்து எடுக்கச் சொல்லி அந்த இளைஞனுக்கு சிக்னல் கொடுத்தாங்களாம். இதைப் பெரியார் பார்த்துட்டார். அவரு சொன்னாராம்: 'தமிழனுக்கு சுயகௌரவமும் தன்மானமும் வரணும்னுதான் நாம இப்படி ஓடா உழைக்கிறோம். அவன் எம்மேல காலைப் போட்டாத்தான் அது அவமரியாதை. அவன் கால்மேல அவன் காலைப் போட்டு உட்கார்ந்தா அது சுயமரியாதை. இதுக்குத் தானே நாம போராடுறோம்' என்று அவனைப் பாராட்டினாராம். நான் கேள்விப்பட்ட இச் சம்பவம் ஸ்மிதாவைப் பார்க்கும்போதெல்லாம் வரும்.

ஷூட்டிங்கில மேக்கப்போட மேக்கப்மேன் என்னைக் கூப்பிட்டாரு. உடனே ஸ்மிதா ''எம்பா... மேக்கப் கிளாமருக்குன்னு எனக்குத்தான் உடம்பு முழுக்கப் பூசுறே. அவ செவ செவன்னு தானே இருக்கா. அவளுக்கும் பூசணுமா. அதெல்லாம் ஒண்ணும் வேணாம் போ'' என்று மேக்கப்மேனை விரட்டாத குறையா தொறத்

அக்டோபர் மாத பட்டுப் புடைவைகளைப் பரிசாக வழங்குவோர்:

னிட்டு ''அவங்களெல்லாம் அப்படித்தான். நீ கொஞ்சம் ஸ்ட்ரிட்டா இரு'' என்று என்னைத் தன் அருகிலே உட்கார வைத்துக் கொண்டு ஒரு சின்ன ஸ்டூலை எதிரே போட்டு உட்கார்ந்து, காலை நீட்டிக் கொண்டார். அவங்களுக்கு டான்ஸ் மூவ் மெண்ட் கொஞ்சம் அதிகமானதால, கால் வீக்கமும் வலியும் வந்திருச்சி. எப்பவுமே ஷூட்டிங் பிரேக்கில பெரிய ஆளு யாராவது திடீர்னு வந்தா நான் எழுந்து நிற்பேன் மரியாதைக்கு. அன்னிக்கு அந்தப் படத்தோட தயாரிப்பாளர் வரும்போது ஸ்மிதா காலை நீட்டி உட்கார்ந்திருந்தாங்க. நான் எழுந்துக்கச் சொல்லி சிக்னல் கொடுத்தேன். ''ஏங்க பயப்படுறீங்க... நான் அவரு மேலேயா காலைப் போட்டு இருக்கேன். ஸ்டூல் மேல தானே போட்டு இருக்கேன். நல்ல கதையா இருக்கே? அவர ஒருநாள் முழுக்க வந்து ஆடச் சொல்லு. கால் வலிக்கு அழுத்திவிடச் சொல்லி அடியாளைக் கூப்பிடுவாரு. நான் நீட்டுறேன். இதுல மரியாதைக்கு எங்க எடமிருக்கு'' என்று கடைசிவரை காலை மடக்கவுமில்லை; எழுந்திருக்கவுமில்லை. இந்தச் சம்பவத்துக்குப் பிறகுதான் சில்க் ஸ்மிதாவைப் பார்க்கிறப்ப எல்லாம் பெரியாரின் அந்தச் சம்பவம் ஞாபகத்தில் வந்து போகும்.


* தந்தை பெரியார்

அசால்டா வாழ்க்கையை, சினிமா உலகத்தை ஹேண்டில் பண்ண சில்க் ஸ்மிதா, எதிர்கொண்ட மேன்மையான பிரச்னைகள், இந்தச் சமூகத்தின் மீதான் கோபத்தை, வன்மத்தை அதிகரிக்கத்தான் வெச்சது. அவங்களோட தற்கொலை பொது அபிப்பிராயத்தில இருந்து பார்த்தா கோழைத்தனம், வாழ கையாலாகாத தனம்னு சொல்வாங்க. 'போங்கடா நீங்களும் உங்க புத்தியும்; போக்கத்த சொலைட்டியில வேஷம் போடுற பொல்லாத ராஸ்கல்ஸ்'ன்னு காறி உமிழ்ந்த செயலாக்கூட அதைப் பார்க்கலாம். அந்தச் சுதந்திரமும் அளப்பரிய தைரியமும் இருந்தாலொழிய அவங்க அப்படியொரு முடிவை எடுத்திருக்க முடியாது.

உங்களுக்குத் தெரியுமா? சில்க் ஸ்மிதா தேம்பித் தேம்பி அழுததால ஒருநாள் முழுக்க ஷூட்டிங்கை கேன்சல் பண்ணிய சம்பவம்! இந்த ஃபீல்டில் வேறு எந்த நடிகைக்கும் இப்படி நேர்ந்திருக்காது. அப்படி அவங்களை உடைச்ச எத்தனையோ சம்பவத்தில இதுவும் ஒண்ணு. ஆந்திராவில விடியற்காலையில் தொடங்கிவிட்டது ஷூட்டிங். எங்கு பார்த்தாலும் ஆண்கள் மயம்...

(தொடரும்)

# ஊர்வசி போட்டி சில்கி சாரி!



## மாதம் 3 புடவைகள் பரிசு!

*வாசகர்களே!*

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந் தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவைப் பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

செப்டெம்பர் மாதக் கூப்பன்களை இணைத்து அனுப்ப

கடைசித் தேதி : **09.11.10**

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**
கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

.......................பின்கோடு:....................

தொலைபேசி : ..........................................

இ-மெயில் : ..........................................

அக்டோபர் - 3

**சில்க் ஸ்மிதாவைப் பார்த்தால் ஊர்வசியின் ஞாபகத்தில் வரும் தலைவர் யார்?**

*விடையை டிக் செய்யவும்*

- ☐ இந்திராகாந்தி
- ☐ ஜெயலலிதா
- ☐ அண்ணாதுரை
- ☐ பெரியார்



* ஞானசுந்தரம் கிருஷ்ணமூர்த்தி

# ஏஜெண்டிடம் பிரீமியம் கொடுக்கலாமா?

**எல்.ஐ.சி.யின் தலைவராகவும் காப்பீட்டுத் தீர்வாணையராகவும் பொறுப்பு வகித்தவர் ஞானசுந்தரம் கிருஷ்ணமூர்த்தி. காப்பீடு விவகாரங்களில் மக்களுக்கு விழிப்பூட்டும் வகையில் சில நீதிமன்றத் தீர்ப்புகளை இங்கே சொல்கிறார்.**

"பாலிசி எடுக்கும்போது மட்டும் நீங்கள் வந்தால் போதும்; மற்றபடி நானே உங்களிடம் பிரீமியம் கட்ட வேண்டிய தேதிக்கு முன்னர் வந்து பணமோ, செக்கோ வாங்கிக் கொள்கிறேன். உங்களுக்கு எந்தச் சிரமமும் இருக்காது" - இது பெரும்பாலான காப்பீடு ஏஜெண்டுகள் பாலிசிதாரர்களிடம் சொல்வது. பெரும்பாலான ஏஜெண்டுகள் சொன்னபடியும் நடந்துகொள்வார்கள். கோபால் விஷயத்திலும் எந்தப் பிரச்னையுமின்றி இந்த ஏற்பாடு நன்றாகவே நடந்து கொண்டிருந்தது. ஆனால் திடீரென்று எல்.ஐ.சி.யிலிருந்து ஒரு கடிதம்: "அய்யா... நீங்கள் போன தவணையும் கட்டவில்லை... இந்த தவணைக்கான நாளும் நெருங்கிவிட்டது. உடனே இரு தவணைகளையும் கட்டுங்கள்" என்று அதிர்ச்சியளித்தது கடிதம். விசாரித்தால் பணம் வாங்கிப்போன ஏஜெண்ட், போன தவணையைக் கட்டாமல் ஏதோ அவசரத்தில் ஊருக்குச் சென்றுவிட்டார்... அதனால் கட்டவில்லை. ஆனால் இந்தக் காலகட்டத்தில் கோபாலுக்கு ஏதாவது நடந்திருந்தால் பாலிசி காலாவதி ஆகிவிட்டது என்று எல்.ஐ.சி. கை விரித்திருக்கும். நம்மில் பலர் ஏஜெண்ட்டிடம் பிரீமியம் கொடுத்தாலே, காப்பீட்டு நிறுவனத்துக்குச் செலுத்துவது போல நினைக்கிறார்கள். அது தவறு. பிரீமியம் வசூலிக்க ஏஜெண்ட்டுகளுக்குப் பொதுவாக அதிகாரம் கிடையாது. "ஏஜெண்ட்டிடம் கொடுத்த தொகையைக் காப்பீட்டு நிறுவனத்திடம் கொடுத்ததாக எடுத்துக் கொள்ள முடியாது" என்று 1997ல் உச்சநீதி மன்றம் சொல்லியிருக்கிறது. ஆனால், இந்தத் தீர்ப்புக்குப் பிறகு வாடிக்கையாளர்களுக்குக் கூடுதல் சௌகரியத்தைக் கொடுக்க வேண்டும் என்ற நோக்கத்தில் சில ஏஜெண்ட்டுகளுக்கு மட்டும் பிரீமியம் வசூலிக்க எல்.ஐ.சி. அதிகாரம் கொடுத்திருக்கிறது. எனவே, பாலிசிதாரர்கள் அங்கீகரிக்கப்பட்ட ஏஜெண்ட்டிடம் பிரீமியம் தொகையைக் கொடுக்கலாம். மற்றவர்களிடம் நம்பிக்கையின் பேரில் கொடுத்தால் அவர் கட்டி விட்டாரா என்பதை உறுதி செய்து கொள்ளவும்.

இப்போதெல்லாம் சேமிப்புடன் இணைந்த ஆயுள் காப்பீட்டுத் திட்டமான ULIP என்ற பாலிசி ரொம்பவும் பாப்புலராகி வருகிறது. கட்டும் பிரீமியத்தில் எண்பது சதவிகிதத்தை சேமிப்பாக எடுத்துக் கொள்ளும் நிறுவனம், மீதியை ஆயுள் காப்பீட்டுக்கு பிரீமியமாக எடுத்துக் கொள்ளும். தீபக் என்பவர் ஐ.சி.ஐ.சி.ஐ. நிறுவனத்தில் இப்படியொரு பாலிசியை எடுத்த நான்கு மாதத்தில் புற்றுநோயால் இறந்து போனார். மருத்துவமனை ரிகார்டுகளைப் பார்த்த நிறுவனம் நோயை மறைத்து பாலிசி எடுத்ததால் பணம் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டது.

விவகாரம் கொச்சி காப்பீட்டுத் தீர்வாணையத்துக்கு வந்தது. "பிரீமியம், சேமிப்பு மற்றும் ஆயுள் காப்பீடு ஆகிய இரண்டுக்கும் சேர்த்துதான் கட்டப்பட்டது. ஆயுள் காப்பீடு தொடர்பான கேட்புரிமையை பாலிசிதாரர்களின் வாரிசுகள் இழந்தாலும், சேமிப்புச்

தொகையைப் பொறுத்தமட்டில் நிறுவனம் உறுதியளித்தபடி ஒன்பது சதப் பணத்தை வட்டியோடு கொடுக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டது.

**ச**ங்கருக்கு ஓட்டுனர் உரிமம் இல்லை. ஆனால் அவர் எடுத்துக்கொண்டு போன ஹீரோ ஹோண்டா ஓட்டல் வாசலில் நிறுத்தப்பட்டிருந்தபோது காணாமல் போய்விட்டது. காப்பீட்டுத் தொகைக்காக மனு செய்தபோது ''அதை ஓட்டியவரிடம் உரிமம் இல்லாததால் பணம் கொடுக்கமுடியாது'' என்று சொல்லிவிட்டது காப்பீட்டு நிறுவனம். விவகாரம் நீதிமன்றம் போனது. ''ஓட்டியவருக்கு உரிமம் இல்லையென்பதும் திருடு போனதும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதது. எனவே காப்பீட்டுத் தொகையை உடனே கொடுக்க வேண்டும்'' என்று உத்தரவு போட்டது நீதிமன்றம். இது ஒரு மாறுபட்ட தீர்ப்பு என்பதால் சொல்கிறேனே தவிர, வாகனத்தை ஓட்டுபவர்கள் கண்டிப்பாக உரிமம் வைத்திருக்க வேண்டும். அது இல்லாமல் காப்பீட்டுத் தொகையை இழந்தவர்கள் நிறைய பேர் உண்டு.

சம்பளத்திலேயே பிரீமியம் பணத்தைப் பிடித்து, பாலிசிதாரர்கள் சார்பாக நிறுவனமே கட்டிவிடும் திட்டம் மிகவும் பாப்புலர். ஆனால், துரதிருஷ்ட வசமாக நிறுவனங்கள் பிரீமியத்தை ஒழுங்காகக் காப்பீட்டு நிறுவனத்திடம் செலுத்துவதில்லை. இதனால் பாதிக்கப்படுபவர்கள் பாலிசிதாரர்களே. தில்லி அரசு நிறுவனமே இதுபோன்று வசூலித்த பிரீமியத்தைக் கட்டாததால் இறந்து போன பாலிசிதாரரின் மனைவிக்குக் காப்பீட்டுத் தொகை தரமுடியாது என்று சொல்லிவிட்டது எல்.ஐ.சி. நீதிமன்றம் போனது விவகாரம். ''நிறுவனம் ஊழியரிடமிருந்து பிரீமியத்தை வசூலித்த பிறகு அதைக் காப்பீட்டு நிறுவனத்துக்குக் கட்டாமல் இருந்ததற்கு பாலிசிதாரர் பொறுப்பல்ல. எனவே எல்.ஐ.சி.காப்பீட்டுத் தொகையை இறந்து போனவரின் வாரிசுக்குக் கொடுக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டது. பிடித்தம் செய்த தொகையை ஒழுங்காக நிறுவனம் கட்டி வருகிறதா என்பதை அவ்வப்போது பார்த்துக் கொள்ள வேண்டும். மக்கள், காப்பீடு விவகாரங்களில் நியாயம் கிடைக்க முதலில் காப்பீட்டுத் தீர்வாணையத்தை அணுகலாம்.




-ஸ்ரீநி



''ஐம்பூதங்களின் நீட்சிதான் உயிரினங்கள். அவற்றில் நிலமும் காற்றும் அதிகமாகவே மாசுபட்டுப்போய் கிடக்கின்றன. பிறக்கும்போது எதையும் கொண்டுவராத நாம் இருப்பதைப் பாழ்படும்படி செய்வதில் எந்த நியாயமும் இல்லை. நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச்சென்ற சுத்தமான காற்றையும், பலன் தரும் நிலத்தையும் பாழ்படாமல் அடுத்த சந்ததிக்குக் கடத்தும் குறியீடாக நமது வாழ்வு அமைந்தாலே போதும்! ஐம்பூதங்களையும் நமக்கு சேவகர்களாக்கிக் கொள்ளலாம். அது நமக்குச் சிறகுகள் பொருத்தி உயரத்துக்குக் கொண்டு போய் சேர்க்கும். இல்லையேல் அவற்றுக்கு நாம்தான் பலியாக வேண்டி வரும். அதனால்தான் எனது ஓவியங்களில் இயற்கை நேச்தை வலியுறுத்துகிறேன். ஒரு புல்லின் முனையைக் கிள்ளினால்கூட ஒரு பூகம்பம் உருவாக மறைமுகக் காரணமாக இருக்கிறோம் என்பதையும் சொல்கிற மீடியம்தான் எனக்கு ஓவியம்'' - தாய்மையின் கரிசனத்தோடு பேசுகிறார் திருச்சி ஜெ.ஜெ. பொறியியல் கல்லூரியின் நான்காமாண்டு மாணவி ஷர்மிளா. இவரது தந்தை மாணிக்கவாசகமும் ஓவியர் என்பதால் அவரைப் பார்த்தே வண்ணங்களின் மீது தனக்குக் காதல் வந்தது என்று சொல்கிறார் ஷர்மிளா. இவரது வண்ணங்களில் மயங்கி ஏராளமான பரிசுகள் இவரது மடியில் விழுந்திருக்கின்றன. இவர் ஒன்பதாம் வகுப்பு படிக்கும்போது கோவையில் வைத்த ஓவியக் கண்காட்சி ஓவிய வட்டாரத்தில் சிலிர்ப்பாகப் பேசப்பட்டிருக்கிறது.

- மகிமைராஜன்

* ஷர்மிளா

# வட்டமேஜை




## த ரியல் ஹீரோ!

**க**ரும்பைத் தின்னவும் கொடுத்து (கருத்துகள் பிரசுரித்தல்) கூலியையும் தருகிறீர்களே (சன்மானம்). கல்கி - த ரியல் ஹீரோ!

**- பி.கோபி, கிருஷ்ணகிரி.**

**ஆ**யிரம் ஆண்டு அற்புதம் என்ற தலைப்பிலான ஸ்பெஷல் பக்கங்கள், மிகவும் அபூர்வமான விவரங்கள் அடங்கிய பக்கங்கள்.

**- இரா.செல்வம், தூத்துக்குடி.**

'**நா**ங்களா திருடர்கள்' என்ற தலைப்பில் பிரசுரமான குறும்படம் பற்றிய விமர்சனத்தைப் படித்ததும், சந்தர்ப்பம் கிடைக்கும்போது கட்டாயம் அதைப் பார்த்துவிட வேண்டும் என்ற ஆவலை ஏற்படுத்தியது.

**- சந்திரா, நாகைப்பட்டினம்.**

''**அ**ப்பாடி... ஒருவழியா பிரபுதேவா-நயன்தாரா விஷயம் திருமணம் என்ற ஒரு முடிவுக்கு வந்துவிட்டதா... சந்தோஷம் தான்!''

**- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்.**

**ஞா**நி அவர்களின் ஓ பக்கங்கள் அரசியல்வாதிகளை சாட்டையடி கொடுப்பதுபோல் உள்ளன.

**- மகிழ்ச்சிக்கருப்பன், சென்னை.**

**த**ஞ்சைக் கோவில் பற்றிய விவரமான கட்டுரையும், அழகான படங்களும், நெஞ்சில் நீங்காத இடம்பிடித்து விட்டன!

**-ந.சேதுராமன், கொடுமுடி.**

**அ**மரர் கல்கியின் கல்வெட்டுகள் வெகு அற்புதம். பாரதியார் பிறந்த எட்டையபுரத்தை எட்டிப் பார்க்காதவர்கள் ஏராளம் ஏராளம் ஏராளம் நபர்கள்.

**-ம.ஜானகிராணி, சென்னை.**

**வே**ப்பெண்ணையில் கலந்து செய்த 'கேக்கை' பிறந்த நாளுக்கு வெட்ட, மத்திய அமைச்சர் சிதம்பரத்துக்குத் தரும் கார்டூன் - கல்கியில் ஸ்பெஷல் பஞ்ச்.

**-ரேவதிப்ரியன், ஈரோடு.**

**ப**ண்ருட்டியார் பேட்டி வெண்டைக்காய் போல் வழவழ... கொழகொழ...!

**- என்.காளிதாஸ், சிதம்பரம்.**

**பி**ரதமர், அமைச்சர் ராஜாவின் ராஜினாமாவைக் கோரப்போவதில்லை, மாறாக அவருக்கு மேலும் ஏதேனும், இரண்டு இலாகாக்களைச் சேர்த்துக் கொடுத்தாலும் கொடுப்பார்!

**-க.சண்முகம், ஆ.புதூர்.**

**க**விதை கஃபே கவிதைகளின் தொகுப்புகள் வெகு சூப்பர்!

**- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், நாகர்கோவில்.**

கலக்க வருதுப்பா...

# கல்கி

ரீடர்ஸ் கெட் ரெடி!

## இப்ப சேலம் மாவட்டத்துக்கு வருது கல்கி டீம்...

- மல்கோவா மாம்பழம்
- தாரமங்கலம் சிற்பம்
- சேலம் இரும்பு உருக்காலை
- ஏற்காடு குளிர்ச்சி
- காவிரியின் வளமை
- ஸ்கந்தாஸ்ரமம் பிரம்மாண்டம்
- மேட்டூரின் முக்கியத்துவம்
- கே.பி.என். சேவை
- ஏலகிரி ஏலக்காய்
- மாடர்ன் தியேட்டர்ஸ் பாரம்பரியம்
- மத்திய சிறைச்சாலை வரலாறு




இன்னும் என்னவெல்லாம் இருக்கு?
சேலம் மாவட்டத்தின் (+) (−) என்ன?
எழுதி அனுப்புங்க...

வாசகர்களே!

உங்க மாவட்டத்தைப் பத்தி நீங்க அனுப்புற தகவல்கள்தான் கல்கி சேலம் மாவட்ட ஸ்பெஷல் இதழ்களுக்கு அஸ்திவாரம்!

# சேலம்
## மாவட்ட வாசகர்களே...
## தித்திப்பான அனுபவத்துக்கு ரெடியாகுங்க!

விவரங்கள் அடுத்த பக்கத்துல இருக்கு!



ஆமாம்! உங்கள் சேலம் மாவட்டத்துக்கு 'கல்கி' டீம், நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

*சில சிம்பிள் கண்டிஷன்ஸ்...*

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்புகள் மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- சேலம் மாவட்டத்தின் பிரச்னைகளுக்கு - ✓ பெட்டிஷன் பாக்ஸ். ஆன்மிக, வியாபார, சுற்றுலாத் தலங்களின் சிறப்புக்கு - ✓ நியூஸ் ஏந்தி பவன். சிறுகதைகள், கவிதைகளுக்கு - ✓ வேடந்தாங்கல். நகைச்சுவைக்கு - ✓ ஜோக் ஃபால்ஸ்... என்றவாறு கூப்பனில் ✓ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசித் தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 25.10.2010**

**கலக்க வருதுப்பா கல்கி**
**சேலம் மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்
☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடுறோம்!

# அழகு கொலுவிருக்கும் நவராத்திரி




86 ஆண்டுகால பட்டுப்பாரம்பரியமிக்க ஆரெம்கேவி! நமது கலாச்சாரத்தின் அடையாளங்களோடும், புதுமையின் பெருமைகளோடும், ஆரெம்கேவியின் டிசைன் ஸ்டுடியோவில், கைதேர்ந்த கலைஞர்களால் இந்த நவராத்திரிக்காக உருவாக்கப்பட்ட புதிய படைப்பு "வர்ணஜாலம்" பட்டுப்புடவைகள் மற்றும் பட்டுப்பாவாடைகள். விரும்பியதை தேர்ந்தெடுத்து நவராத்திரியை ஆனந்தமாய் கொண்டாடுங்கள்.



சென்னை | பனகல்பார்க்
கோயம்புத்தூர் | ப்ருக்ஃபீல்ட்ஸ்
திருநெல்வேலி | வண்ணார்பேட்டை
toll free no **1800 425 3105**
(applicable within India only from 10 am to 9 pm)
to know more about our new navaratri collection **sms RmKV to 53636**
email silks@rmkv.com
purchase online at
**www.rmkv.com**

subrata bhowmick design

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57" Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11" Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 / 11" Registered as a Newspaper in Srilanka.